# விசாலாந்திரா வெற்றி

Phone : 85777
தந்தி:—"ஜனசக்தி"
விலை 3 அணா
இலங்கையில் 25 சதம்
(விமானப் பதிப்பு)

# ஜனசக்தி

(கம்யூனிஸ்ட் கட்சி வார இதழ்)

மலர் 12] 11—3—56 [இதழ் 25

## மொழிவழிக் கிளர்ச்சியின் மகத்தான சாதனை

ஆந்திரத்தையும் தெலிங்காணாவையும் ஒரே ஆட்சியில் இணைத்து ஹைதராபாத் நகரை தலைநகராகக் கொண்ட விசால ஆந்திரத்தை உருவாக்குவதென இந்திய சர்க்கார் முடிவெடுத்திருப்பதாக பிரதமர் நேரு 6-ந் தேதி அறிவித்தார். மொழிவழி ஆட்சி கோரிய மக்களுக்கு, இது ஒரு மகத்தான வெற்றி. தெலுங்கு மொழியின் அடிப்படையில் தெலுங்குப் பிரதேசங்களை ஒன்றுபடுத்தவேண்டுமென்று வெகுகாலம் கிளர்ச்சிசெய்துவந்த மக்களுக்கு இது மற்றொரு மாபெரும் வெற்றி.

பன்மொழி பேசும் பிரதேசங்களை ஓராட்சியில் பிணைத்து இந்திய மக்களின் மொழிவழி ஆட்சிக் கிளர்ச்சிக்கு குழிதோண்டச் சதிசெய்த சதிகாரர்களுக்கு இது ஒரு மாபெரும் தோல்வி. காங்கிரஸ் தலைமையின் சமீபகால தடுமாற்றங்களுக்கு இது ஒரு அடி. பிரிட்டிஷ் காலத்திய ஆட்சி அமைப்பை அப்படியே நீடிக்கவேண்டும் என்றவர்களுக்கு, பத்தாம்பசலி சமஸ்தான அமைப்புகளையும் ஹைதராபாத் நைஜாம்போன்ற பிற்போக்குத் தர்பார்களையும் அவ்விதமே நீடிக்கவேண்டுமென்று சூழ்ச்சிபுரிந்தோர்களுக்கு இது ஓர் அடி.

மொழிவழி மாகாண ஆட்சிக்காக நடந்த போராட்டத்தில் முன்னணியில் நின்ற மக்கள் ஆந்திர மக்கள். பொட்டி ஸ்ரீராமுலுவின் தியாகம், ஆந்திர மக்களின் போராட்டம், இந்தியாவெங்கும் அதற்கு மக்கள் தந்த ஆதரவு ஆந்திர ராஜ்யத்தை உருவாக்கின. மொழிவழி ஆட்சி கோருவது மாகாணப் பித்து, பிற்போக்குக் கிளர்ச்சி என்று அந்த இயக்கத்தைக் கடுமையான அடக்குமுறைமூலம் அடக்க முயன்ற நேரு சர்க்காரை அன்றைய இயக்கம் பணிய வைத்தது. எந்தக் காங்கிரஸ் தலைவர், இந்தியப் பிரதமர் அந்தக் கோரிக்கையை எதிர்த்தாரோ அதே பிரதமர் ஆந்திர மாகாணத்தை 1953 அக்டோபர் 31-ந்தேதி அங்குரார்ப்பணம் செய்துவைக்கும்படி நிர்ப்பந்திக்கப்பட்டார்.

அதன்விளைவாக எங்கும் மொழிவழி மாகாணக் கிளர்ச்சி மேலும் தீவிரமடைந்தது. நேரு சர்க்கார் இந்த இயக்கத்திற்கு நேர் எதிராக இருந்தபோதிலும் இந்திய தேசமெங்கும் மாகாணங்களைப் புனரமைக்கும் பிரச்சினையைப் பரிசீலனைசெய்ய ராஜ்யப் புனரமைப்புக் கமிஷனை நிறுவியது. இந்தக் கமிஷனுக்கு சர்க்கார் விடுத்த உத்தரவு ஒரு நேர்மையான உத்தரவல்ல. மொழியின் அடிப்படையில் ராஜ்யங்களைப் புனரமைத்தல்பற்றி பரிசீலனை செய்ய வேண்டுமென்று கமிஷனுக்கு உத்தரவிட சர்க்கார் மறுத்தது. மாறாக, மொழி, நிர்வாகச் சாதனம், பொருளாதாரத்துறையில் சுயதேவைப் பூர்த்தி செய்தல் போன்ற பலபட்டரைக் கொள்கைகளை மனதில்கொண்டு புனரமைப்புப் பிரச்னைகளை பரிசீலனை செய்யவேண்டுமென்று உத்தரவிட்டது.

காங்கிரசின் சென்றகாலப் பரம்பரைக்கே விரோதமான இவ்விதக் கொள்கைதான் ராஜ்யப் புனரமைப்புக் கமிஷன் வெளியிட்ட கொள்கையற்ற ரிப்போர்ட்டிற்குக் காரணம்.

பம்பாயை தனிராஜ்யமாக்குவது, பஞ்சாபி மொழி பேசும் மக்களுக்கான ராஜ்யத்தைத் தர மறுப்பது, எல்லைப் பிரதேசங்களை மொழியின் அடிப்படையில் தீர்க்காமல் நிர்வாக அனுகூலம், போன்ற பிரச்னைகளை எழுப்பி, இந்தப் பிரதேசம் அங்கிருக்க வேண்டும் அல்லது இங்கிருக்க வேண்டும் என்பது, ஒரே மொழி பேசும் மக்களாகிய தெலிங்காணா ஆந்திரா போன்ற பிரதேசங்களிலுள்ள மக்களுக்கு இரு ராஜ்யங்களை அமைப்பது போன்ற ஒரு கொள்கையற்ற அறிக்கையை ராஜ்யப் புனரமைப்புக் கமிஷன் வெளியிட்டது. இதனால் நாட்டில் குழப்பந்தான் அதிகரித்தது. பம்பாயிலும், ஒரிசாவிலும், இன்னும் பல பிரதேசங்களின் எல்லைகளிலும் ஏற்பட்ட குழப்பங்களுக்கும் கிளர்ச்சிக்களுக்கும் மூலகாரணம் கமிஷனின் கொள்கையற்ற சிபார்சுகளும் இந்திய சர்க்காரின் போக்கும்தான்.

இவ்விதப் போக்கை எதிர்த்து நாடெங்கும் இயக்கம் நடந்தது. மொழியின் அடிப்படையில்தான் கமிஷனின் சிபார்சுகள் மாற்றப்படவேண்டும் என்ற இயக்கம் தீவிரமடைந்தது.

### கொள்கையற்ற இணைப்பிற்குத் தூபம்

மொழிவழி ஆட்சி, அரசாங்க அமைப்பில் சாதாரண மக்களும் நேரடியாகப் பங்குகொள்ளும் சந்தர்ப்பத்தை அதிகரிக்கிறதல்லவா? இதை நேரு சர்க்கார் விரும்பவில்லை. எவ்விதமாயினும் மொழிவழி ஆட்சி ஏற்படாமல் செய்ய மீண்டும் ஒரு பகிரத முயற்சி செய்யப்பட்டது. அதுதான் இரண்டு அல்லது மூன்று ராஜ்யங்களை இணைத்து ஒரே ராஜ்யமாக்குவது என்ற சூழ்ச்சி. வங்க முதல் மந்திரி டாக்டர் பி. ஸி. ராயையும், பீஹார் முதன்மந்திரி ஸ்ரீ கிருஷ்ண சின்ஹாவையும் தூண்டிவிட்டு வங்க-பீஹார் இணைப்பு அவசியம் என்ற கூட்டறிக்கை விடப்பட்டது. அதேபோல் ஆந்திரம், கன்னடம், தமிழகம், கேரளம் ஆகிய பிரதேசங்களை இணைக்கும் தட்சிண ராஜ்யம் வேண்டும் என்ற கிளர்ச்சியும் முடுக்கிவிடப்பட்டது. இவ்விதம் ராஜ்யப் புனரமைப்புக் கமிஷன் இதுவரை ஒப்புக்கொண்டுள்ள மொழிவழி ராஜ்யங்களைக்கூட நிராகரிக்க சதிகள் ஆரம்பமாயின.

இந்திய மக்களையும் அவர்களது 35 வருஷகால மொழிவழி ராஜ்ய இயக்கத்தையும் மறந்துவிட்டே இந்தச் சதிகள் நடந்தன. ஆனால் மக்கள் இதை அனுமதிக்கத் தயாராக இல்லை.

### எங்கும் எதிர்ப்பு

தட்சிண ராஜ்யத்தை எதிர்த்து தமிழகமெங்கும் மக்கள் எழுந்தனர். கேரளத்திலும், கன்னடத்திலும் இதே எதிர்ப்பு. பம்பாயும் உள்ளிட்ட சம்யுக்த மகாராஷ்டிரம் வேண்டும் என்ற கிளர்ச்சி சர்க்காரின் கொடிய அடக்குமுறைக்கும் தலைவணங்காது தொடர்ந்து நடக்கிறது. வங்காளத்தில் பி. ஸி. ராயின் இணைப்புத் திட்டங்களை முறியடிக்க பிப்ரவரி 27ந் தேதி வங்காளம் பூராவிலும் வங்கத்தின் பரம்பரைக்கேற்ப ஹர்த்தால் நடந்தது. வங்காள மொழி ஆட்சிக்கு எதிராக வங்காளக் காங்கிரஸ் தலைமை செல்வதால் சமீபத்தில் நடந்த நகரசபைத் தேர்தல்களில் வங்காளக் காங்கிரஸ் மிகப் பெரும் தோல்வி அடைந்தது. பஞ்சாபிலும் பஞ்சாபி மொழிவழிக் கிளர்ச்சி பிரதமர் நேரு அவர்களின் விருப்பத்திற்கு நேர் எதிராக மேலும் தீவிரமாகி வருகிறது.

அதேபோல் ஒரேமொழி பேசும் மக்களுள்ள ஆந்திராவிலும் தெலிங்காணாவிலும் இரு ராஜ்யங்களமைப்பது என்ற ராஜப் புனரமைப்புக் குழுவின் ஆலோசனையையும், பின்னர் தூண்டிவிடப்பட்ட தட்சிண ராஜ்யக் கூப்பாட்டையும் எதிர்த்து ஆந்திராவிலும், தெலிங்காணாவிலும் சகல கட்சியினரும் ஒருமுகமாகக் கிளர்ச்சி செய்தனர்.

### ஒற்றுமைக் கிளர்ச்சி வெற்றி

தெலிங்காணா ஒரு பின்தங்கிய பிரதேசம் இது இன்றைய ஆந்திரத்துடன் இணைந்திருந்தால் தெலிங்காணா வளர்ச்சி பாதிக்கப்படும். எனவே தெலிங்காணாவும் ஆந்திரமும் இணைந்த ஒரே மொழிவழி ஆட்சி கூடாது என்றும் ஒரு சிலரால் கிளர்ச்சி செய்யப்பட்டது. இந்த முட்டுக்கட்டையும் இன்று அகற்றப்பட்டுள்ளது. ஆந்திராவிலும் தெலிங்காணாவிலும் சகல கட்சியினரும் பின்தங்கிய தெலிங்காணப் பகுதிகளுக்கு வாக்குறுதிகள் தந்தனர். பின்தங்கிய பிரதேசத்திற்கு விசேஷ கவனம் செலுத்துவதற்கான ஏற்பாடுகளும் செய்தனர். இவ்விதப் பிதிப்பிரசாரம் செய்தவர்களுக்கும் இடமில்லாது செய்தனர்.

தெலிங்காணாவையும் ஆந்திரத்தையும் இணைத்து விசால ஆந்திரம் அமைக்கவேண்டுமென்று கம்யூனிஸ்டுக் கட்சிமட்டுமல்ல, காங்கிரஸும் ஏனைய கட்சிகளும் ஒன்றுபட்டுநின்று கிளர்ச்சி செய்தனர்.

இப்படிப்பட்ட சூழ்நிலை உருவானபிறகுதான் இந்திய சர்க்கார் விசால ஆந்திரம் அமைக்க ஒப்புக்கொண்டுள்ளது.

மொழிவெறி, மாகாணப்பித்து, குறுகிய ஜாதியப் பார்வை என்றெல்லாம் குற்றங்கூறி ஒரு ஜனநாயக இயக்கத்தை அடக்கி ஒடுக்க முயன்று தோற்றபிறகுதான் இந்திய சர்க்கார் இன்று தெலுங்கு மொழியை அடிப்படையாகக் கொண்ட விசால ஆந்திரம் அமைக்க ஒப்புக்கொண்டுள்ளது.

இது தெலுங்குபேசும் மக்களின் வெற்றி என்பதுமட்டுமல்ல, இந்தியாவெங்குமுள்ள மொழிவழி ஆட்சிக்காகப் போராடும் மக்களின் மகத்தான வெற்றியாகும். தட்சிணப்பிரதேச 'டமாரங்களி'ன் மாபெரும் தோல்வியாகும். இணைப்புப் 'பீரங்கி'களின் தோல்வியாகும்.

### மற்ற பிரச்சனைகளுக்கும் இதுதான் வழி

இவ்வித கிளர்ச்சிக்குப் பிறகாகிலும் சர்க்காருக்கு புத்திவந்ததைப் பாராட்டத்தான் வேண்டும். இத்துடன் நில்லாமல் மேலும் அனாவசியக் கிளர்ச்சிகள் வராமல் தடுக்கவேண்டுமானால், பம்பாயும் உள்ளிட்ட மகாராஷ்டிரத்தையும், பஞ்சாபி ராஜ்யத்தையும் அமைக்க துரிதமாகவே சர்க்கார் ஒரு முடிவெடுக்கவேண்டும். வீண் கவுரவத்தை விட்டொழிக்கவேண்டும். சர்க்காரின் பிற்போக்கு முயற்சிக்கு இந்திய மக்கள் ஒருநாளும் ஒப்புதல் தரமாட்டார்களென்பதை உணரவேண்டும். ஒரேமொழி பேசும் தொடர்ச்சியான பிரதேசம் என்ற அடிப்படையில் தமிழக—ஆந்திர—கேரள—கன்னட எல்லைப் பிரச்னைகளையும் சுமுகமாகத் தீர்க்க சர்க்கார் முன்வரவேண்டும். இவ்வழியல்லாது வேறு எந்த வழியாலும் எல்லைப் பிரச்னைகளைத் தீர்க்க முடியாது. எல்லைப் பிரச்னைகளில் சச்சரவைத் தீர்க்க முடியாமல் இரு ராஜ்ய இணைப்பு என்று பசப்பி குட்டையைக் குழப்பாமல் துரிதமாகவே ராஜ்யப் புனரமைப்புப் பிரச்னையைச் சர்க்கார் தீர்க்கவேண்டுமென்று கோருகிறோம்.

—கே. எம்.

## இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் நாலாவது காங்கிரஸ்

### 1956 ஏப்ரல் 19ந் தேதி முதல் 29 வரை பாலக்காட்டில் நடைபெறும்

சரித்திர முக்கியத்வம்வாய்ந்த ஒரு கட்டத்தில் கம்யூனிஸ்டுக் கட்சியின் அகில இந்திய மகாநாடு கூடுகிறது.

இந்திய மக்களின் நல்வாழ்வுக்குகந்த கொள்கையைப் பிரதிநிதிகள் கூடி விவாதிப்பார்கள்.

கடந்த 8 மாதங்களாக இந்தியா முழுவதும் முறையே டவுன், தாலூகா, ஜில்லா, மாகாண மகாநாடுகளில் ஆயிரக்கணக்கான பிரதிநிதிகள் கட்சியின் மத்தியக் கமிட்டித் தீர்மானம் வரையறுத்த கொள்கையை விவாதித்து தத்தம் ஆலோசனைகளைக் கூறியிருக்கின்றனர். வேறெந்தக் கட்சியிலும் கட்சித் தலைமை வகுக்கும் திட்டம் இவ்வளவு விரிவான ஜனநாயக முறையில் விவாதிக்கப்படுகிறதென்று கூற முடியாது. இந்த விவாதங்களின் சிகரமாக பாலக்காடு மகாநாடு (கட்சியின் நாலாவது காங்கிரஸ்) நடக்கிறது.

நாட்டிலேற்பட்டுள்ள நிலைமையில், மக்கள் கம்யூனிஸ்டுக் கட்சி என்ன கூறப்போகிறதென்று ஆவலுடன் எதிர்பார்க்கிறார்கள். கம்யூனிஸ்டுக் கட்சியை மகத்தான பெருமையும் பொறுப்பும் எதிர்நோக்குகிறது. இந்தியாவின் அரசியல் வாழ்க்கையில் பாலக்காடு மகாநாட்டின் முடிவுகள் முக்கியமான இடம் பெறுவது நிச்சயம்.

இந்திய தேச மெங்கிலுமிருந்து கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்கள் வருகிறார்கள்.

இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் சுமார் 400 பிரதிநிதிகள் மகாநாட்டிற்கு வருகிறார்கள். முக்கால் லட்சம் கட்சி உறுப்பினர்களின் பிரதிநிதிகள், முன்னணி ஊழியர்கள், தேசவிடுதலை, உழைப்பாளர்கள் உரிமைப் போர்களில் தியாகத் தழும்பேற்ற மக்களின் உத்தமப் புதல்வர் புதல்வியர் வருகிறார்கள். தொழிலாளர் விவசாயிகள் படிப்பாளிகளிடையிலிருந்து புடம்போட்டு எடுக்கப்பட்ட தலைசிறந்த பிரதிநிதிகள் வருகிறார்கள். பத்துநாட்கள் பாலக்காட்டில் கூடி பாங்கான திட்டம் வகுத்து தேசிய முன்னேற்றத்திற்கான பதாகை ஏந்தி முன்செல்லப் போகிறார்கள்.

மகாநாடு நடைபெறும் நாட்களில் எல்லாம் விதவிதமான கலா நிகழ்ச்சிகள் புதுமைக் கலையின் பொன்னான காட்சிகள் தொடர்ந்து நடைபெறும்.

நமது தேசிய இயக்கத்தில் யுகப் பிரசித்தி பெற்ற முக்கிய கட்டங்கள், நிகழ்ச்சிகள், தியாகிகளின் வரலாறு, உலக முற்றுமுள்ள கம்யூனிஸ்ட் கட்சிகளின் வளர்ச்சி சாதனைகள் உலக சமாதான இயக்கம், பாந்துங் மகாநாடு இவற்றைச் சீராகச் சித்தரித்துச் செழுமையான போதமும் சிறந்த உத்வேகமும் அளிக்கும் விசேஷக் கண்காட்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன.

★ மகாநாட்டின் இறுதி நாளில் 29-ந் தேதி பிரம்மாண்டமான அணிவகுப்பு உண்டு.

இம் மகாநாட்டின் முக்கியத்துவத்தை தமிழகமெங்கும் பரப்புவது நமது உடனடிக் கடமை. மகாநாட்டுச் செலவுக்கு நிதிவேண்டும். வசூலித்து-வரவேற்புக் கமிட்டிக்கு அனுப்புக.

செயலாளர், வரவேற்புக் கமிட்டி,
கம்யூனிஸ்டுக் கட்சி ஆபீஸ், பாலக்காடு

என்ற விலாசத்திற்கு நன்கொடைகள் அனுப்பவும்.

கேரளம் முழுவதும் வாலண்டியர் படைகளும் விவசாயிகள் — தொழிலாளிகள், மாணவர்கள், பெண்கள் ஜாதாக்கள் புறப்படத் தயாராகிக் கொண்டிருக்கின்றன. கிராமம் கிராமமாகப் பிரசாரம் நடக்கிறது. கம்யூனிஸ்ட் கட்சியின் 4-வது கட்சிக் காங்கிரஸ் கூடும் செய்தியை எங்கும் எடுத்துச் செல்லுமாறு கேட்டுக்கொள்ளுகிறோம்.

## ஒரு திருத்தம்

கடந்த வார "ஜனசக்தி" (4-3-56) இதழில் முதல் பக்கத்தில் வெளியாகியுள்ள தோழர் அஜய் கோஷ் வாழ்த்துரையில் நாலாவது கலம், நாலாவது வரியில் தேசிய முன்னணியைக் கட்டி வளர்க்கும் என்று இருப்பது தவறு. அதை 'தேசிய ஐக்கியத்தைக் கட்டி வளர்க்கும்' என்று திருத்தி வாசிக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

—ஆசிரியர்.

## தலையங்கம்

# தலைவாயிலில் தலையீடு

ஸியாட்டோ ராணுவ ஒப்பந்தத்தில் அங்கம் வகித்துவரும் ஆஸ்திரேலியா, பிரிட்டன், பிரான்ஸ், நியூஜிலந்து, பாகிஸ்தான், பிலிப்பைன், தாய்லந்து, அமெரிக்கா நாடுகளின் மந்திரிகள் கராச்சியில் கூடியிருக்கிறார்கள். இரகசிய மந்திராலோசனைகள் நடத்துகிறார்கள். பாகிஸ்தான் மந்திரி காஷ்மீர் பிரச்னையை எழுப்பியிருக்கிறார்.

அமெரிக்க ராஜாங்க மந்திரி டல்லஸ் சோவியத் சாணக்கியங்களை எதிர்த்து ஒவ்வொரு நாட்டின் ஆட்சியையும் குப்புறக் கவிழ்க்கும் சதி வேலைகள் செய்வதாகக் குற்றம் சாட்டி ராணுவக் கூட்டணி பாதுகாப்பைப் பலப்படுத்தவேண்டும் என்று பசப்புகிறார்.

கம்யூனிசம் என்ற 'தொத்துநோய்' தலைகாட்டாத சுதந்திர சமூகத்தை சிருஷ்டிக்க வேண்டும் என்று சொல்லிக்கொண்டு டல்லசும், பிரிட்டிஷ் மந்திரியும் தென்கிழக்கு ஆசியாவிலுள்ள ஒவ்வொரு நாட்டின் உள்விவகாரத்திலும் தலையிட முன்வந்து விட்டார்கள்.

கராச்சி மகாநாட்டின் உண்மை நோக்கம் என்ன? ஸியாட்டோ ஒரு ராணுவக் கூட்டணி, இதனால் சமாதானத்திற்குப் பங்கம் விளையும், இதில் கலந்துகொள்வதால் தமது நாட்டின் சொந்த அரசுரிமையைக் கைவிட நேரும் என்பதை சோவியத் யூனியன் எடுத்துக்காட்டியது. இந்த உண்மையை இந்தியா தெட்டத் தெளிவாகத் தெரிந்துகொண்டது. இதர ஆசிய நாடுகளும் புரிந்து வருகின்றன. எனவேதான் அமெரிக்கா இந்த ஒப்பந்தத்தையும் ஒரு ருத்ராட்சப் பூனையாக மாற்ற முயன்றது.

இந்த ஒப்பந்தத்தின் பேரால் பல்வேறு கமிட்டிகள் போடப்பட்டுள்ளன. ராணுவ ஆலோசனையாளர், இரகசிய உளவாளர், பொருளாதார நிபுணர்கள், கலாசார, கல்வி, தொழிலாளர் தொழில் நுட்ப நிபுணர்கள் கமிட்டிகள் போடப்பட்டுள்ளன. இவ்வித அமைப்புகள் மூலம் இந்த ராணுவக் கூட்டணியிலுள்ள ஒவ்வொரு நாட்டிலும் அமெரிக்க ஆதிக்கமும் சுரண்டலும் ராணுவ தளங்களும் உருவாகி வருகின்றன.

இந்த உள்நோக்கத்துடன் உண்டாக்கப்பட்ட கூட்டணி தற்காப்பு கூட்டணி என்று டல்லஸ், லாயிட் போன்ற ஏகாதிபத்தியப் பிரதிநிதிகள் கூறுவதுதான் வேடிக்கை.

ஆனால் இந்த ராணுவக் கூட்டணியின் விஷத்தன்மையை இதன் யுத்த வெறியைத் திரையிட்டு மூடிமறைக்க முடியவில்லை. அதோடு இந்தியாவுக்கு புல்கானின் விஜயம் செய்ததன் பின்னால் இந்தியாவுக்கு அருகில்—தலைவாயிலில்—பாகிஸ்தானில் கூடித் தமது ஜபர்தஸ்துகளைக் காட்டவேண்டும்; இந்தியாவை மிரட்டி தனது வலைக்குள் கொண்டுவரவேண்டும் என்று அமெரிக்கா திட்டமிட்டு வேலை செய்கிறது. இதன் விளைவே இந்த மகாநாடு.

காஷ்மீர் பிரச்சனை இந்த கூட்டணி மகாநாட்டில் கிளப்பப்பட்டுள்ளதும் இதே நோக்கத்திற்குத்தான். பாகிஸ்தான்—இந்தியா சச்சரவை உபயோகித்துக்கொண்டு குரங்கு மத்தியஸ்த வேலை செய்யப் புரியும் சதி இது.

இந்தியாவின் தலைவாயிலில் நின்று அச்சுறுத்தல் செய்கிறது, அறைகூவுகிறது அமெரிக்கா. ஆசிய ஆப்பிரிக்க நாடுகளின் பாந்துங் முடிவுகளுக்கும் பாந்துங் கூட்டணிக்கும் பாதகம் விளைவிக்கும் சதி இது. பந்தோபஸ்தின் பெயரால் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடும் நிலை.

ஆசியாவில் அமெரிக்கா அண்மையில் செய்து வருவது என்ன? ஹைட்ரோஜன் குண்டு சோதனை, அணுகுண்டு யுத்தத்திற்குத் திட்டங்கள், பார்மோசாவில் தலையீடு, கொரியா, இந்தோசீனவில் தலையீடு, பாகிஸ்தான் இந்திய உறவில் தலையீடு, மலாயாவில் தேசபக்தர்களைக் கொன்றழிக்க ஆஸ்திரேலியத் துருப்புக்களை ஏவுவது இவற்றுக்கு ஸியாட்டோ ஆயுதமாக்கப்பட்டுள்ளது.

இந்த நிலைமையை இனி ஒரு கணமும் அனுமதிக்க முடியாது. ஆசிய நாடுகள் அமெரிக்காவுக்கு அடங்கா, அடிமைப்படா. பஞ்சசீலக் கோட்பாடுகளின் அடிப்படையில் மட்டுமே நாடுகளிடையே நட்புறவை வளர்க்கமுடியும், ராணுவக் கூட்டணிகளால் அல்ல என்பதை ஆசிய நாடுகள் நன்கு உணர்த்தவேண்டும். பெற்ற சுதந்திரத்தைப் பேணிக்காக்க வேண்டும்.

ஏகாதிபத்தியக் குறுக்கீடுகளை, சதியாலோசனைகளை தகர்ப்பது நமது கடமை. இதில் கட்சி வேற்றுமை இல்லை. சியாட்டோ போன்ற ராணுவக் கூட்டணிகளை முறியடிக்க நமது சுதந்திரத்தைப் பாதுகாக்க சர்வ கட்சிகளும் ஒற்றுமையாக நின்று போராடவேண்டும். இந்தச் சதியாலோசனைகளைத் தகர்க்க சர்க்கார் எடுக்கும் சகல நடவடிக்கைகளுக்கும் சகல தேசபக்தர்களின் ஆதரவும் நிச்சயமாக உண்டு.

# சேலம் தியாகிகள் தினம்

1950-ம் ஆண்டு பிப்ரவரி 11-ம் தேதி சேலம் மத்திய சிறைக்குள் இருந்த கம்யூனிஸ்ட், தொழிற்சங்க, விவசாய சங்கத் தலைவர்கள் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்து 22 பேர்களைப் படுகொலை செய்தது காங்கிரஸ் சர்க்கார்.

அந்தத் தியாகிகளின் நினைவு நாள் கூட்டம் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் சேலம் போஸ் மைதானத்தில் தோழர் குழந்தையப்பன் தலைமையில் நடைபெற்றது. தோழர் கே. செல்வராஜ், எஸ். எம். ராமையா ஆகியோர் பேசினர்.

பின்னர் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

(1) சேலம் மத்திய சிறையில் சுட்டுக் கொல்லப்பட்ட கம்யூனிஸ்ட், தொழிற்சங்க, விவசாய சங்கத் தலைவர்களுக்கு அஞ்சலி செலுத்தியது; (2) ஆச்சார்ய நரேந்திர தேவ், மேகநாத் ஸாஹா, பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை மறைவு குறித்து அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது; (3) தக்ஷிணப்பிரதேச அமைப்பை எதிர்த்தும், உடனடியாக ஐக்கிய தமிழகத்தை அமைக்கக்கோரியும்; (4) 20-ம் தேதி ஹர்த்தாலன்று கைது செய்யப்பட்ட அனைவரையும் நிபந்தனையின்றி விடுதலை செய்யவேண்டுமெனவும், தம்மம்பட்டியில் நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகம்பற்றி பொது விசாரணை நடத்த வேண்டுமென சர்க்காரைக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## புயல் நிவாரணம்

புயல் நிவாரண நிதி திரட்ட தஞ்சை ஜில்லா கிள்ளுக்குடி பகுதியில், விவசாயிகள் சங்கம் சார்பில் கமிட்டி அமைத்து ரூ. 18-1-0 அனுப்பப்பட்டது.

# பிப். 20: ஹர்த்தால்

## சில குறிப்புகள்

எம்.ஆர். வெங்கட்ராமன்

20ந் தேதி தமிழ்நாட்டில் நடைபெற்ற ஹர்த்தால் விசேஷ முக்யத்வம் வாய்ந்தது. இதுவரை பல ஹர்த்தால்கள் நடந்திருக்கின்றன. ஆனால் இந்த ஹர்த்தால்தான் தமிழ்நாட்டின் நகரங்களைமட்டுமல்ல எண்ணற்ற கிராமங்களையும் கவர்ந்தது. என்றுமிராதவாறு தொழிலாளிகளும் விவசாயிகளும் ஒரே அரசியல் நடவடிக்கையில் ஈடுபட்டனர். வியாபாரிகள், மாணவர்கள், பிற பல பொதுமக்கள் தங்கள் ஆதரவையும் அளித்தனர். பெருவாரியான தமிழ் மக்களின் ஒற்றுமையைப் பிரதிபலிக்கும் இயக்கமாக இது விளங்கியது.

காங்கிரஸ் சர்க்கார் [illegible] ஹர்த்தாலை ஆட்சேபித்தது. இதனாலேற்படும் விளைவுகளுக்கு ஹர்த்தாலை நடத்துபவர்களே பொறுப்பாளிகளென எச்சரித்தது. ஹர்த்தாலில் சேராதவர்களுக்கு போலீஸ் உதவியளிக்கப்படுமென்று உறுதி கூறியது. எல்லா நகரங்களிலும் பலத்த போலீஸ் பந்தோபஸ்து நிறுவப்பட்டது.

காங்கிரஸ் கட்சி இந்த ஹர்த்தாலை விரும்பவில்லை. பல இடங்களில் சில காங்கிரஸ் தலைவர்கள் ஹர்த்தாலில் சேரக்கூடாதென்று மக்களுக்கு வேண்டுகோள் விடுத்தனர்; கடையடைப்புச் செய்யக்கூடாதென்று வியாபாரிகளை நிர்ப்பந்தித்தனர்.

திராவிடக் கழகமும் இந்த ஹர்த்தாலில் கலந்துகொள்ளவில்லை.

ஆயினும், இதர அரசியல் கட்சிகளின் வேண்டுகோளுக்கிணங்கி தமிழ்மக்கள் இந்த ஹர்த்தாலைச் சிறப்புடன் நடத்தி வெற்றிபெறச் செய்தனர். இதற்குக் காரணம் என்ன?

### நோக்கம்

ஹர்த்தாலின் லட்சியம் பின்வருமாறு வரையறுக்கப்பட்டது.

1. பன்மொழி அமைப்பான தட்சிண ராஜ்ய ஆலோசனையை காங்கிரஸ் சர்க்கார் கைவிட்டு மொழிவழி மாகாண அமைப்பை உறுதியாக ஏற்று தமிழ் மாகாணம் அமைக்க முன்வர வேண்டும்.

2. தமிழ் மாகாணத்தின் எல்லைகள் நியாயமான, ஜனநாயக, கோட்பாடுகளினடிப்படையில் நிர்ணயிக்கப்பட வேண்டும். அடுத்துள்ள இதர மொழி பேசும் மாகாணங்களிலுள்ள தமிழ்ப் பிரதேசங்கள் தமிழ் மாகாணத்துடனும் தமிழ் மாகாணத்திலுள்ள பிற மொழி பேசும் பிரதேசங்கள் அந்தந்த மொழிவழி மாகாணத்துடனும் மேற்கூறிய ஜனநாயக முறையில் சுமுகமாக இணைக்கப்பட வேண்டும்.

3. தமிழ் மாகாணத்திற்கு சென்னை ராஜ்யமென்ற பெயரை எடுத்துவிட்டுத் தமிழ் நாடு என்று பெயரிடவேண்டும்.

இந்தக் கோரிக்கைகளை எந்தத் தமிழனும் நியாயமானவை என்று மறுக்க முடியாது. ஏன், எந்த இந்தியனும் மறுக்க முடியாத கோரிக்கைகள் இவை. நியாயமான இந்தக் கோரிக்கைகளுக்கு காங்கிரஸ் கட்சியை ஆதரிப்பவர்கள்கூட ஆதரவு தராமலிருக்க முடியாது. சொல்லப்போனால் காங்கிரஸ் கட்சியே நீண்டகாலம் வற்புறுத்திவந்த மொழிவழி மாகாணக் கோரிக்கையை புறக்கணித்தாலொழிய காங்கிரஸ்காரர்களுக்கும் இதில் நிச்சயம் உடன்பாடு உண்டு.

அதனால்தான் இந்த ஹர்த்தாலில் காங்கிரஸ் கட்சியும் காங்கிரஸ் சர்க்காரும் மக்களிடமிருந்து தனிமைப்படுத்தப்பட்டு நின்றன என்பது தெளிவு.

### அமைதியான ஆர்ப்பாட்டம்

இந்த ஹர்த்தால் எங்கும் அமைதியாகவும் கட்டுப்பாட்டுடனும் நடைபெற்றது தமிழக மக்களின் ஒற்றுமையை இந்த நடவடிக்கையில் பிரதிபலித்தது இன்னொரு விசேஷமான அம்சமாகும். பல கட்சிகள் கொண்ட கூட்டணியின் இந்த ஆரம்ப நடவடிக்கையில் மக்கள் இஷ்டபூர்வமாகக் கலந்துகொள்ள வேண்டுமென்றே கூட்டணி விரும்பியது.

ரெயில் நிறுத்தம், மோட்டார் போக்குவரத்து நிறுத்தம், கடைகளை மூடும்படியான நிர்ப்பந்தம் எதையும் அனுமதிக்கக்கூடாதெனவும் மக்களுக்கு எத்தகைய அசௌகரியமும் ஏற்படக்கூடாதெனவும் கம்யூனிஸ்டுக் கட்சி விசேஷ அறைகூவலையும் வெளியிட்டது. மாகாண முழுவதும் கம்யூனிஸ்டு கட்சி யூனிட்டுகள் கட்டுப்பாடுடன் கூட்டணி முடிவுகளை நிறைவேற்றித்தர முன்னுதாரணமாக வேலைசெய்ததுபாராட்டுதலுக்குரியது.

### கட்சிகளின் ஒத்துழைப்பு

சர்வகட்சிக் கூட்டணியிலிருந்த எல்லாக் கட்சிகளும் ஒத்துழைத்ததும் இந்த ஹர்த்தால் வெற்றிக்கு ஒரு முக்கியமான காரணமாகும். இந்த வெற்றி எந்த ஒரு கட்சியின் வெற்றியுமல்ல, கூட்டணியின் வெற்றியேயாகும்.

கூட்டணியில் கம்யூனிஸ்டு கட்சி, திராவிட முன்னேற்றக் கழகம், தமிழரசுக் கழகம், சோஷலிஸ்டு கட்சி, பிரஜா சோஷலிஸ்டு கட்சி, நடிகர் சங்கம் இன்னும் பிற பல ஸ்தாபனங்களும் பிரமுகர்களுமிருந்தனர்.

கூட்டணியிலிருந்த கட்சிகளுக்கிடையே கொள்கை ரீதியில் பல அடிப்படையான கருத்து மாறுபாடுகள் உண்டு. அவையெல்லாம் இந்தக் கூட்டணி அமைக்கப்பட்டுவிட்டதனாலும் இந்த ஹர்த்தால் சம்பந்தமாக ஏற்பட்ட நல்லுறவாலும் மறைந்துவிட்டன என்று நினைப்பது நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளுவதாகும்.

### பொதுப் பிரச்னையில் ஒற்றுமை கண்டனர்

ஆனால்—ஒன்று நிச்சயம். இந்த ஹர்த்தால் நடவடிக்கையைப் பொறுத்தவரையில் கூட்டணியிலுள்ள எல்லாக் கட்சிகளும் தங்கள் தங்கள் பிரத்தியேக லட்சியங்களையும் திட்டங்களையும் பிரதானப் படுத்தாமல், இந்த ஒன்றுபட்ட நடவடிக்கைக்கான உடன்பாடுள்ள குறைந்தபட்ச அம்சங்களை மட்டும் முதன்மைப்படுத்தி வெற்றி கண்டார்கள். இது பாராட்டத் தக்கது. நீண்ட காலம் பிரிந்திருந்தவர்களும், சந்தேகப் பார்வையுடன் ஒருவரையொருவர் அணுகாமலிருந்தவர்களும்—ஒரு பொதுவான ஆரம்ப நடவடிக்கையில் தமிழ் மக்களின் நலனைப் பெரிதாகக் கருதி ஈடுபட்டார்கள்.

இதிலிருந்து தமிழ் மக்களின் நலனையும் ஜனநாயக உரிமைகளையும் பாதிக்கும் வேறு பல பிரச்சினைகளிலும் கூட்டணியிலுள்ள கட்சிகள் காலப்போக்கில் ஒன்றுபட்டு நிற்பது மேன்மேலும் சாத்தியம். அதற்கான ஒரு ஆரம்பத்தை இந்த ஹர்த்தால் கூட்டணி நடவடிக்கை சிருஷ்டித்திருக்கிறதென்று தடையின்றிக் கூறலாம்.

### தத்தம் மேடைகளில்

கூட்டணியிலுள்ள எல்லாக் கட்சிகளுக்கும் தத்தம் மேடைகளில் தங்கள் தங்களது முழுத் திட்டத்தையும் ஆலோசனைகளையும் தமிழ் மக்கள் முன்வைத்து ஆதரவு திரட்ட பரிபூர்ண உரிமை உண்டு. தட்சிண ராஜ்யம், எல்லைக்கோடுகளை எந்த அடிப்படையில் நிர்ணயிப்பது என்பதுபற்றி கம்யூனிஸ்டு கட்சியின் தீர்மானங்களை கட்சிக் கூட்டங்களில் பொது மக்களுக்குத் தொடர்ந்து விளக்குவது ஒவ்வொரு கட்சி யூனிட்டின் கடமையாகும். இதேமாதிரி இதர கட்சியினரும் தங்கள் அபிப்பிராயங்களைக் கூறுவர். எது சரியானதாயிருக்குமென்று காலப்போக்கில் தமிழ் மக்கள் முடிவு செய்வார்கள்.

அதேசமயத்தில் கூட்டணியின் நடவடிக்கைகளிலும் பொதுவான கூட்டங்களிலும் கூட்டணியின் முடிவுக்குட்பட்டே நமது சொற்பொழிவுகளும் நடவடிக்கைகளுமிருப்பதே இந்த சர்வகட்சி ஒற்றுமையையும் பரஸ்பர நம்பிக்கையையும் மேலும் வளர்க்க வல்லது.

### காங்கிரஸ்காரர்களும் வரவேண்டும்

தோழர்கள் புல்கானின் குருஷேவ் விஜயம் செய்தபோது கம்யூனிஸ்டு கட்சியும் காங்கிரஸ் கட்சியும் ஒத்துழைத்தன. தட்சிண பிரதேச எதிர்ப்பு ஹர்த்தாலில் காங்கிரஸ்கட்சி விலகி நின்றது. கோவா போராட்ட ஹர்த்தாலில் காங்கிரஸ் கட்சி உட்பட எல்லாக் கட்சிகளும் கலந்துகொண்டன. ஜனநாயகரீதியான பிரச்னைகளில் காங்கிரஸ் கட்சியைப் பின்பற்றுபவர்களும் ஆதரவு தருவது மக்களின் சக்திக்கு ஒரு பூரணத்துவமளிப்பதைப் பிரத்தியட்சமாகப் பார்க்கிறோம். இத்தகைய விரிவான ஒற்றுமையை உருவாக்கும் முறையில் கம்யூனிஸ்ட் கட்சி தனது ஜனநாயக ஆலோசனைகளை ஒவ்வொரு பிரச்சினையிலும் வைத்துப் போராடும். இத்தகைய மக்களின் ஐக்கியமே வெற்றிக்கு உறுதியான உத்தரவாதமாகும்.

### பிளவு முயற்சியை கைவிடுக!

காங்கிரஸ் சர்க்கார் இப்பொழுதாவது தட்சிண ராஜ்யம் அடியோடு கைவிடப்பட்டுவிட்டதென்று அறிவிக்கவேண்டும். அதற்கு மாறாக கூட்டணியிலுள்ள கட்சிகளுக்குள் வேற்றுமைகளைக் கிளப்பவோ, பிரிவினையைக் கோருகிறவர்கள், பிரிவினை கோராதவர்களென்று பாகுபாடுகளைச் சுட்டிக்காட்டவோ முயற்சிப்பது பலனளிக்காது. கூட்டணியிலுள்ள கட்சிகள் தங்களது பல அபிப்பிராய பேதங்களை மறைக்கவில்லை. ஆயினும் இந்த ஒரு நடவடிக்கையைப் பொறுத்தமட்டில் ஒன்றுபட்டு நின்றிருக்கிறார்கள். மக்களுக்குத் தலைமை தாங்கியிருக்கிறார்கள். 20ந் தேதி ஹர்த்தால் மூலம் தமிழ் மக்கள் வெளிப்படுத்திய ஏகோபித்த அபிப்பிராயத்தை ஏற்று நடப்பதே விவேகமாகும் என்று காங்கிரஸ் சர்க்காருக்குக் கூற விரும்புகிறோம்.

20ந் தேதி ஹர்த்தால் சம்பந்தமாகத் தொடரப்பட்டுள்ள வழக்குகளை வாபஸ் பெற்றுக்கொள்ள வேண்டுமென்றும் கோருகிறோம்.

## ராமநாதபுரம் ஜில்லாக் கமிட்டி

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் ராமனுதபுரம் ஜில்லாக் கமிட்டியின் காரியாலயத்தை ஸ்ரீ வில்லிப்புத்தூரிலிருந்து,

திலகர் விலாசம்
பெருமாள் கோயில் வடக்கு
காரைக்குடி

என்ற விலாசத்துக்கு மாற்றப்பட்டிருக்கிறது.

ஆர்.எச். நாதன்,
காரியதரிசி.

## இந்திய ருஷ்ய கப்பல் போக்குவரத்து

இப்போது அமுலில் இருக்கும் ஈஸ்டர்ன் ஷிப்பிங் கார்ப்பொரேஷன் கப்பல் கம்பெனி சர்க்கார்—சிந்தியா கம்பெனிகூட்டு உடமையிலிருந்து சர்க்காரே நேராக எடுத்துக்கொள்ள முடிவு செய்திருக்கிறது.

இதோடு பத்துக் கோடி ரூபாய் செலவில் இன்றும் ஒரு கப்பல் கார்ப்பொரேஷன் ஆரம்பிக்கவும் முடிவு செய்திருக்கிறது. இக்கப்பல்கள் செங்கடலுக்கும் கருங்கடலுக்குமிடையில் சஞ்சரிக்கும், சோவியத் யூனியனுக்கும் இந்தியாவுக்குமிடையே வர்த்தகம் நடத்த உதவுவதே இந்தக் கப்பல் போக்குவரத்தின் உத்தேசம்.

இது சம்பந்தமாக ஆலோசனைகள் நடத்த சோவியத் யூனியனிலிருந்து ஒரு பிரதிநிதி கோஷ்டி இந்தியாவுக்கு விஜயம் செய்யும் எனத் தெரியவருகிறது.

# சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின்

# 20வது காங்கிரஸ் தீர்மானம்

## [முழுவாசகம்]

**சோ**வியத்யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் கமிட்டியினுடைய நடவடிக்கைகள் பற்றி, சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் முதல் செயலாளர் தோழர் என். எஸ். குருஷேவ் சமர்ப்பித்த ரிப்போர்ட்டை, சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் இருபதாவது காங்கிரஸ் கேட்டு விவாதித்தது; சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக்கமிட்டியினுடைய அரசியல் கொள்கையையும், நடைமுறைச் செயல்களையும் அது பூரணமாகவும் முழுமையாகவும் அங்கீகரிப்பதென தீர்மானிக்கிறது; மத்தியக் கமிட்டி தன்னுடைய ரிப்போர்ட்டில் கூறியுள்ள யோசனைகளையும், முடிவுகளையும் அது அங்கீகரிக்கிறது.

கட்சியின் மத்தியக் கமிட்டியின் லெனினிஸக் கொள்கையின் விளைவாகவும், சோவியத் சர்க்காரும், இதர சோஷலிஸ்ட் நாடுகளின் மிக நெருங்கிய ஒத்துழைப்போடு சோவியத் மக்கள் ஆற்றிய வீர மிக்கப் பணியாலும் இந்த நாட்டில் கம்யூனிஸத்தைக் கட்டுவதிலும் உலகெங்கும் சமாதானத்தை ஏற்படுத்துவதில் பிரம்மாண்டமான வெற்றிகள் பெறப்பட்டிருப்பதையும் திருப்தியுடன் இந்த காங்கிரஸ் குறிப்பிடுகிறது.

'நமது நாட்டின் பலம் மேலும் வளருவதை உறுதிப்படுத்தக் கூடிய தொழில், விவசாயத்துறைகளிலும் சோஷலிஸ்ட் பொருளாதாரத்தில், புதிய தீவிரமான முன்னேற்றத்தைக் கொண்டுவருவதற்கும், சோவியத் மக்களின் வாழ்க்கைத்தரத்தைக் கணிசமான அளவு உயர்த்துவதற்கும், பரிசிலனைக்குரிய இந்தக் காலகட்டத்தில் சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் கமிட்டி எடுத்துள்ள சரியான, காலத்திற்கேற்ற நடவடிக்கைகளைக் காங்கிரஸ் முழு மனதுடன் அங்கீகரிக்கிறது.

சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் மத்தியக் கமிட்டியினது வெற்றிகரமான நடவடிக்கைகள், மார்க்சிஸ லெனினிஸப் போதனைகளைச் சிருஷ்டிபூர்வமாக அனுஷ்டிப்பதையும் உள்கட்சி ஜனநாயகம், கூட்டுத் தலைமை போன்ற லெனினிஸ கோட்பாடுகளை வழுவாமல் பின்பற்றுவதையும், மக்களுக்கும் கட்சிக்கும் இடையே இருக்க வேண்டிய பிரிக்க முடியாத உறவுபற்றி லெனின் கொடுத்துள்ள கட்டளைகளை பிறழாமல் அனுஷ்டிப்பதையும் அடிப்படையாகக் கொண்டது என்று காங்கிரஸ் வலியுறுத்துகிறது. இந்த ஆண்டுகள் முழுவதும் அழிவற்ற லெனினின் மகத்தான பதாகையை கட்சி உயர்த்திப் பிடித்திருக்கிறது.

## I

## சர்வதேச நிலைமை

பரிசிலனைக்குரிய இந்த காலத்தில், சர்வதேச உறவுகளின் வளர்சசியில் நெருக்கடி ஒருகுறிப்பிட்ட அளவு தளர்த்தப்பட்டிருப்பதும், சமாதானத்தைக் கெட்டிப்படுத்துவதற்கு சர்வதேச அரங்கில், உண்மையான வாய்ப்புகளுக்கு வழி திறந்து விடப்பட்டிருப்பதும் குறிப்பிடத் தக்கவை என காங்கிரஸ் எடுத்துக் காட்டுகிறது. சமாதானத்தையும் பந்தோபஸ்தையும் பலப்படுத்தக் கூடிய முறையில் பல முக்கியமான ராஜதந்திர நடவடிக்கைகளை நல்லதோர் சந்தர்ப்பத்தில் சோவியத் யூனியன், மக்கள்சீனக் குடியரசுடனும், இதர மக்கள் ஜனநாயக குடியரசுகளுடனும் சேர்ந்து எடுத்துள்ளது. சமாதானத்தை விரும்பும் எல்லா சக்திகளாலும் இந்த நடவடிக்கைகள் தீவிரமாக ஆதரிக்கப்பட்டுள்ளன.

### சோஷலிஸம் ஓர் உலக அமைப்பு

சோஷலிஸத்தின் நிலைமையை உறுதிப்படுத்தும் முறையிலே உலகெங்கும் அடிப்படை மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன என்பதை, சம்பவங்களின் முழு வளர்ச்சிப் போக்கும் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றது. ஒரு தனி நாட்டின் எல்லைக்குள்ளேயே, சோஷலிஸம் ஏற்பட்டதும் அது ஒரு உலக அமைப்பாக மாற்றப்பட்டதும் நமது சகாப்தத்தின் பிரதான அம்சமாகும். உலக வியாபகமான சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த இந்தப் போக்கைத் தடுப்பதற்கு முதலாத்துவம் திராணியற்றதென நிரூபிக்கப்பட்டுள்ளது. சக்தி வாய்ந்த பொருளாதார கலாச்சார முன்னேற்றம் தொடர்ந்து ஏற்பட்டுக்கொண்டே இருக்கின்றது; மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்ந்து கொண்டே இருக்கின்றது; கம்யூனிச, தொழிலாளி வர்க்கக் கட்சிகளோடும், சுதந்திரமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்கங்களோடும், மக்களுக்குள்ள தார்மீக அரசியல் ஒற்றுமையும், ஐக்கியமும் மேலும் மேலும் வளர்ந்து கொண்டே இருக்கின்றன. இதை சோவியத் யூனியனிலும் மக்கள் சீனக் குடியரசிலும் போலந்து மக்கள் குடியரசிலும், செக்கோஸ்லோவேகிய குடியரசிலும், ஹங்கேரிய மக்கள் குடியரசிலும், ருமேனிய மக்கள் குடியரசிலும், பல்கேரிய மக்கள் குடியரசிலும் அல்பேனிய மக்கள் குடியரசிலும் ஜர்மன் ஜனநாயகக்குடியரசிலும், கொரிய மக்கள் குடியரசிலும், மங்கோலிய மக்கள் குடியரசிலும், வியத்நாம் ஜனநாயகக் குடியரசிலும் காணலாம். யுகோஸ்லோவியாவிலும் சோஷலிசத்தைக் கட்டுவதில் பல வெற்றிகள் கிடைத்துள்ளன. சோஷலிசத்தைப் பின்பற்றும் நாடுகளின் பொருளாதார வளர்ச்சியானது உறுதியானதோர் அஸ்திவாரத்தில் நிறுவப்பட்டுள்ளது. வளர்ந்துவரும் சமத்துவமான ஒத்துழைப்பு, பரஸ்பர சகோதர உதவி என்கின்ற சூழ்நிலைமைகளிலே அந்த வளர்ச்சி ஏற்படுகிறது.

### முதலாளித்வ உலகில்

ஆதிக்க மண்டலம் சுருங்கியுள்ள முதலாளித்வ உலகில், ஆழமான முரண்பாடுகள் மேலும் வளர்ந்துவரும் நிலையை காணலாம். யுத்தம் முடிந்த பத்தாண்டுகளுள் முதலாளித்வ நாடுகளில் உற்பத்திபெருகியிருக்கிறது; ஆனால் இது பொருளாதாரங்களை ராணுமயமாக்குவது, ஆயுதப்போட்டி, வெளிநாடுகளில் தீவிரமான பொருளாதார விஸ்தரிப்பு, நிலையான மூலதனத்தைப் புதுப்பிப்பது, உழைப்பாளி மக்களை சுரண்டுவதை மிக மிகக் கடுமை ஆக்கியது போன்றவைகள் மூலம் ஏற்படுத்தப்பட்டது; இருந்தபோதிலும் முதலாளித்வ பொருளாதாரங்களானது ஸ்திரப்படுத்தப்படவில்லை. அதற்கு மாறாக அவைமேலும் ஸ்திரமற்று இருக்கின்றன. முதலாளித்துவத்தின் பொதுநெருக்கடி தொடர்ந்து ஆழமாகிக்கொண்டே போகிறது. முதலாளித்வத்தின் தீர்க்கமுடியாத முரண்பாடான நவீன உற்பத்தி சக்திகளுக்கும், உற்பத்தியிலுள்ள முதலாளித்துவ உறவுகளுக்கும், இடையேயுள்ள முரண்பாடானது மேலும் மேலும் தீவிரமாக வளர்ந்துகொண்டிருக்கிறது. மார்க்கெட்டுகளுக்காகவும், செல்வாக்கு மண்டலங்களுக்காகவும் போராடிக்கொண்டிருக்கும் முதலாளித்வ நாடுகளுக்கிடையே உள்ள முரண்பாடுகளும் ஆழமாகிக் கொண்டிருக்கின்றன; சமூக முரண்பாடுகளும்கூட அவற்றின் அளவிலும், வீச்சிலும் வளர்ந்து கொண்டே இருக்கின்றன. தொழிலாளிவர்க்கம் கடுமையாக சுரண்டப்படுவதாலும், வாழ்க்கைச் செலவு உயர்ந்துகொண்டேபோவதாலும், ராணுவ காரணங்களுக்காக வரி விதிக்கப்படுவது தீவிரமாக அதிகப்பட்டிருப்பதாலும், பல முதலாளித்வ நாடுகளில் நிரந்தரமான வேலையில்லா திண்டாட்டம் இருப்பதாலும், உழைப்பாளி மக்களின் வாழ்க்கைத் தரங்கள் கீழே சென்று கொண்டிருக்கின்றன. தங்களின் ஜீவாதார உரிமைகளுக்காகவும் நலன்களுக்காகவும் தொழிலாளி வர்க்கமும், இதர மக்களின் பகுதிகளும் போராடுவது வளர்ந்துகொண்டேயிருக்கிறது. புதிய பொருளாதார சமூக எழுச்சிகளை நோக்கி முதலாளித்வம் சென்று கொண்டிருக்கிறது.

## இரு போக்குகள்

இந்த ஓர் பின்னணியில்நேருக்கு நேர் எதிரான இரு அடிப்படைப் போக்குகள் சர்வதேச சம்பவங்களின் வளர்ச்சியிலே தெளிவாக உருவெடுத்துள்ளன.

ஒரு பக்கத்தில், பிற்போக்கான அமெரிக்க வட்டாரங்களின் தலைமையின் கீழுள்ள ஏகாதிபத்ய நாடுகள், யுத்தம் முடிந்த உடனே "ஆயுத பலத்தின் உச்சிமீது நிற்கும்" கொள்கையை கடைப்பிடித்தன; தொழிலாளி வர்க்கத்தையும், ஜனநாயகதேசிய விடுதலை இயக்கங்களையும்நசுக்குவதற்கும், சோஷலிஸ முகாமின் நிலையை பலவீனப் படுத்துவதற்கும், உலக ஆதிக்கத்தைப் பெறுவதற்கும் விரும்புகின்ற இந்நாடுகளிலே இருக்கக்கூடிய, மிகவும் ஆக்கிரமிப்பு எண்ணங்களை உடைய பகுதிகளின் அபிலாஷையை இது பிரதிபலிக்கிறது. கட்டுப்பாடற்ற ஆயுதப் போட்டியை நடத்துவது; சோவியத் யூனியன், மக்கள் ஜனநாயகங்கள் ஆகியவற்றின் எல்லைகளுக்கருகே அமெரிக்க ராணுவ தளங்களை ஏற்படுத்துவது; சோஷலிஸ்டு முகாமிலுள்ள நாடுகளுக்கு எதிரான ஆக்கிரமிப்பு அணிகளை உருவாக்குவது; சோஷலிஸ்ட் நாடுகளுக்கு எதிராக "கெடுபிடி யுத்தத்தை" நடத்துவது; புதிய கோர யுத்தங்களுக்கு தயாரிப்பது ஆகியவைதான் நடைமுறையில் இந்த கொள்கைக்கு அர்த்தமாகும்.

இதற்கு மாறாக, மக்களின் பந்தோபஸ்திற்கும், நிலையான சமாதானத்திற்கும் உழைக்கும் சக்திகள் உலகில் பலம் பெற்று வருகின்றன; யுத்த அபாயத்திற்கெதிராகவும், மாறுபட்ட பொருளாதார, சமூக அமைப்புகளையுடைய இராஜ்யங்களுக்கிடையே சமாதான பூர்வமான சகவாழ்வு வேண்டுமென்பதற்காகவும் தீவிரமான போராட்டத்தைஅவை வளர்த்து வருகின்றன. சர்வதேச சோஷலிஸ முகாம் உறுதியாகக் கெட்டிப்படுத்தப்படுவதானது, உலக வளர்ச்சிகளின் போக்கில் அதிகமான செல்வாக்கை வகிப்பது, இங்கு தீர்மானமான முக்கியத்துவம் வாய்ந்ததாகிறது. இராணுவ அணிகளில் பங்கு கொள்ளாமலிருப்பதைத் தங்கள் அந்நிய நாட்டுக் கொள்கையின் கோட்பாடாகப் பிரகடனப் படுத்திய ஐரோப்பிய, ஆசிய நாடுகளின் குழு ஒன்று உலக அரங்கில் தோன்றியுள்ளதானது சமாதான சக்திகளை கணிசமான அளவு பலப்படுத்தியுள்ளது. இதன் விளைவாக, உலக ஜனத் தொகையில் பாதிக்குமேல் கொண்டுள்ள, சமாதானத்தை விரும்புகின்ற, சோஷலிஸ்ட், சோஷலிஸ்ட் அல்லாத ஐரோப்பிய, ஆசிய நாடுகளைக் கொண்ட ஒரு விரிந்த "சமாதானப் பிரதேசம்" உலகில் தோன்றியுள்ளது. ஏகாதிபத்திய, காலனி அமைப்பில் இப்பொழுது ஏற்பட்டு வரும் சிதைவானது, உலக சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த ஓர் யுத்த பிற்கால வளர்ச்சியாகும். சென்ற பத்தாண்டுகளில், காலனி அரைக் காலனி மக்களின் தேசிய விடுதலைப் போராட்டங்கள் மகத்தான வெற்றிகளைப் பெற்றுள்ளன; நூற்றிருபது கோடி மக்களுக்குமேல் — அதாவது உலக ஜனத் தொகையில் பாதிக்குமேல்— காலனி, அரைக்காலனி சார்புநிலையிலிருந்து விடுவிக்கப்பட்டுள்ளனர். காலனி அமைப்பைப் பூரணமாக ஒழிப்பது இன்று நிகழ்ச்சி நிரலிலே இடம் பெற்றுள்ளது. லெனின் தீர்க்க தரிசனத்டன் கூறிய உலக வரலாற்றின் புதிய காலகட்டம்வந்துள்ளது; கீழ்நாட்டு மக்கள் உலக முழுவதின் தலைவிதியைத் தீர்மானிப்பதில் தீவிரமானதோர் பங்கை ஆற்றி வருகிறார்கள்; சர்வதேச உறவுகளில் அவர்கள் புதியதோர் சக்தி வாய்ந்த அம்சமாக ஆகிவருகின்றனர்.

## சமாதானத்திற்கான போராட்டம்

யுத்த அபாயத்திற்கு எதிராக மிகத் தீவிரமாகவும், தவறாமலும் போராடுவது கம்யூனிஸ்ட் கட்சிகள்தான் என்பது நிரூபிக்கப்பட்டுள்ளது. சமாதானத்தைப் பாதுகாக்கவும், உழைப்பாளி மக்களின் நலன்களையும், தேசங்களின் தேசிய சுதந்திரத்தையும் பாதுகாப்பதற்காகவும் நடைபெறும் போராட்டத்தின் மத்தியிலேயே அவர்களிருக்கிறார்கள்.

அதே சமயத்தில் சமூகத்திலுள்ள வேறுபல பகுதிகளும் யுத்தத்தை எதிர்க்கிறார்கள். யுத்தத்தை எதிர்க்கும் எல்லா சக்திகளும் சமாதானத்தைப் பாதுகாப்பதற்கான தங்கள் முயற்சிகளைத் தளர்த்தாமல், ஒன்றாகச் சேர்ந்து செயலாற்றுவது சமாதானத்தைக் கெட்டிப்படுத்துவதற்கு மிகவும் அவசியமாகும். இந்த நோக்கத்துடன், தொழிலாளிவர்க்க இயக்கங்களுக்குள்ளேயுள்ள பிளவுகளை நீக்கி, கம்யூனிஸ்ட் கட்சிகளுக்கும், சோஷலிஸ்டுகளுக்குமிடையேயும், சமாதானத்தைப் பாதுகாக்கவும், ஏகாதிபத்திய ஒடுக்குமுறையை முறியடிக்கவும், மக்களின் ஜனநாயக, சுதந்திர தேசிய நலன்களைப் பாதுகாக்கவும் விரும்புகின்ற இதர கட்சிகளுடனும் காரியபூர்வமான உறவுகளை ஏற்படுத்துவது மிகமிக முக்கியமாகும்.

சர்வதேச நெருக்கடியைத் தளர்த்துவதிலும், சமாதானத்தைப் பலப்படுத்துவதிலும், ஜனநாயக சக்திகளைக் கெட்டிப்படுத்துவதிலும், பிரதானமான வெற்றிகளை அளித்துள்ள, சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் கமிட்டியும், சோவியத் அரசாங்கமும் பின்பற்றிவரும் சமாதான பூர்வமான வெளிநாட்டுக் கொள்கையைக் காங்கிரஸ் அங்கீகரிக்கின்றது.

### பஞ்சசீலத்தில் பங்கு

சமாதான பூர்வமான சகவாழ்வுபற்றிய லெனினிஸக் கோட்பாடுகளின் அடிப்படையில் எல்லா நாடுகளுக்கிடையேயுள்ள உறவுகளை அபிவிருத்தி செய்யவும், நம்பிக்கையைப் பலப்படுத்தவும், ஒத்துழைப்பை வளர்க்கவும், மத்தியக் கமிட்டியும், சோவியத் அரசாங்கமும் கடைப்பிடிக்கும் கொள்கை பூரணமாகச் சரியானது என கட்சியின் இருபதாவது காங்கிரஸ் கருதுகிறது. பல நாடுகளாலும், விரிவான அளவில் பொதுஜனங்களாலும் அங்கீகரிக்கப்பட்டுள்ள, சர்வதேச உறவுகளுக்கான பிரசித்திப்பெற்ற ஐம்பெரும் கோட்பாடுகள் இத்துறையில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கும். பிரதேச உரிமையையும், அரசுரிமையையும் பரஸ்பரம் கௌரவிப்பது; அனாக்கிரமிப்பு; ஒருவர் மற்றவரின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடாமை; சமத்துவமும் பரஸ்பர அனுகூலமும்; சமாதான சகவாழ்வு பொருளாதார ஒத்துழைப்பு என்று சொல்லப்படுகின்ற இந்தக் கோட்பாடுகள், மாறுபட்ட சமூக அமைப்புகளையுடைய நாடுகளுக்கிடையே இருக்கவேண்டிய உறவுகளுக்குத் தேவையானதோர் விதியை அளிக்கின்றது; உலகிலுள்ள எல்லா நாடுகளுக்கிடையேயும் நிரந்தரமான சமாதான உறவுகளை ஏற்படுத்துவதற்கான அடிப்படையாகவும் அவை திகழ முடியும்.

ஆயுத பரிஹரணத்தை ஏற்படுத்தவும், அணு, ஜலவாயு ஆயுதங்களைத் தடைசெய்யவும், ஐரோப்பாவிலும், ஆசியாவிலும் கூட்டுப் பாதுகாப்பை உறுதிப்படுத்தவும் சோவியத் யூனியனும் மக்கள் சீனக் குடியரசும், இதர சமாதானத்தை விரும்பும் நாடுகளும் சமர்ப்பித்த பிரேரணைகள் சரியானவை, தக்க தருணத்தில் கொடுக்கப்பட்டவை என்பதை வாழ்க்கை நிரூபித்துவிட்டது. இந்த முக்கியமான பிரச்னைகளைத் தீர்ப்பது நீண்ட, நிலையான சமாதானத்திற்கு வேண்டிய அஸ்திவாரங்களை நிறுவும்; தீர்க்கப்பட வேண்டிய இதர பிரச்னைகளை, குறிப்பாக ஜெர்மன் பிரச்னையைத் தீர்க்க அது உதவும். உலகின் இரு மிகப்பெரிய வல்லரசுகளான சோவியத் யூனியனுக்கும், அமெரிக்காவுக்கு மிடையே நிரந்தரமான நேச உறவுகளை ஏற்படுத்துவதும், சோவியத் யூனியனுக்கும் பெரும் வல்லரசுகளான பிரிட்டன், பிரான்ஸ் ஆகியவற்றிற்

(அடுத்த பக்கம் பார்க்க)

(முன் பக்கத் தொடர்ச்சி)

# . . . 20வது காங்கிரஸ் தீர்மானம்

வேலை செய்யும் நேரம் குறைக்கப்படும் பொழுது, தொழிற்சாலைகளிலும், அலுவலகங்களிலும் வேலை செய்யும் தொழிலாளர்களின் சம்பளம் கொஞ்சமும் குறைக்கப்பட மாட்டாது.

### உழைப்பாளர் நலன்

இந்த நடவடிக்கைகளெல்லாம் சோவியத் யூனியனின் உழைப்பாளி மக்களின் நலன்களுக்கு முழுதும் உகந்ததாக இருப்பதால் அவற்றை காங்கிரஸ் ஏகமனதாக அங்கீகரிக்கிற ; இவை சோவியத் மக்கள் அனைவராலும் ஆர்வமுடன் அங்கீகரிக்கப்படும் என்ற உறுதியான நம்பிக்கையையும் தெரிவிக்கிறது; ஆருவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பூர்த்திசெய்வதற்கான முயற்சிகளுக்கு வேண்டிய புதியதோர் உழைப்பின் உற்சாகத்தை இவை தட்டி எழுப்பும்.

மிகக் குறைந்த அளவிலே பென்ஷன் பெறுபவர்களின் பென்ஷனைக் கணிசமான அளவு உயர்த்தி நியாயமற்ற முறையிலே அளிக்கப்படும் உயர்ந்த அளவு பென்ஷனை குறைக்கும் நோக்கத்தோடு, பென்ஷன் அமைப்பிலே புதியதோர் ஒழுங்கைப் புகுத்துவதற்கும் வயது முதிர்ந்த பிரஜைகளுக்கு அதிகப்படியான கவனம் செலுத்துவதற்கும், அங்கஹீனர்கள் தங்கள் உடல்நிலைக்கு பாதகம் ஏற்படாத முறையிலே, சமூகத்திற்கு பயன்தரத்தக்க வேலைகளில் ஈடுபடுவதற்கு வேண்டிய தொழில் வாய்ப்புகளை அபிவிருத்தி செய்வதற்கும் மத்திய கமிட்டி எடுத்துள்ள முடிவானது மிகுந்த முக்கியத்வம் வாய்ந்ததாகும்.

## வீடு, கலாசாரம், கல்வி

ஆருவது ஐந்தாண்டு திட்டத்தின்படி வீடுகளின் அளவு, சென்ற ஐந்தாண்டு காலத்துடன் ஒப்பிடும்பொழுது இரு மடங்காக இருக்கும். சோவியத் அரசாங்கம் இந்நோக்கத்திற்காக ஒதுக்கியுள்ள நிதியை சரிவர பயன்படுத்துவது இவ்விஷயத்தில் மிகுந்த முக்கியத்வம் வாய்ந்ததாகும். இத்துறையில் அதிகப்படியான ஒழுங்கை நிலைநாட்டவும் சகலவிதமான கட்டிடகலை விரயத்தையும், தொழில் நுணுக்கம் தெரியாத தன்மையையும் அறவே அகற்றவும் கட்டிட நிர்மாணத்தில் இயந்திரத்தொழில் முறைகளைப் புகுத்தவும், சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் கமிட்டியும், சோவியத் யூனியன் மந்திரி சபையும் எடுத்துள்ள நடவடிக்கைகளை காங்கிரஸ் அங்கீகரிக்கிறது ; அரசாங்கத்தின் கட்டிடம் கட்டும் திட்டங்கள் சற்றும் தவருமல் பூர்த்தி செய்யப்படுவதைக் கண்காணித்தும், தொழிற்சாலைகளிலும் அலுவலகங்களிலும் வேலை செய்யும் தொழிலாளர்கள் தங்களின் சேமிப்புகளைக்கொண்டே சொந்த வீடுகளைக் கட்டிக்கொள்வதற்கு சகல விதங்களிலும் உதவி செய்ய வேண்டுமென்று கட்சிக்கும், பொருளாதார ஸ்தாபனங்களிற்கும் காங்கிரஸ் கட்டளை விடுகிறது.

மக்களின் அன்றாடத் தேவைகளுக்கு அதிகப்படியான கவனம் செலுத்தி, பொது உணவு விடுதிகளின் அமைப்பை மேலும் விஸ்தரித்து, அவற்றின் செலவைக் குறைத்து, உணவின் தரத்தை அபிவிருத்தி செய்வது அவசியமென காங்கிரஸ் கருதுகிறது. லாண்டிரிகள், தையல் தொழில் நிலையங்கள், துணி, பூட்ஸ், செருப்பு ஆகியவற்றைப் பழுது பார்க்கும் கடைகள் முதலிய பொதுஜனத்தேவைகளைப் பூர்த்தி செய்யும் நிலையங்கள் யாவும் இன்னும் அதிகப்படியாக அதிகரிக்கப்பட வேண்டும். கணிசமான அளவு உழைப்பைக் குறைக்கும் வீட்டுத் தேவைக்கான பொருட்களும், இயந்திரங்களும் உற்பத்தி செய்யப்பட வேண்டும்.

சகல கலாச்சார துறைகளிலும், முக்கியமான வெற்றிகள் பெறப்பட்டுள்ளன. ஏழாண்டு இலவசப் பள்ளி போதனை நாடு முழுவதும் புகுத்தப்பட்டுள்ளது. பிரதான நகரங்களில் பத்தாண்டுக் கல்வி புகுத்தப்பட்டுள்ளது. நாடு முழுவதும் பத்தாண்டு கால போதனைக்கு படிப்படியாக மாறுவதற்கான சூழ்நிலைகள் உருவாக்கப்படுகின்றன.

நாட்டின் உயர்தர கல்வி நிலையங்களில் படித்து பட்டம் பெறும் நிபுணர்களின் எண்ணிக்கை கணிசமான அளவு உயர்ந்திருக்கிறது. தேசிய பொருளாதாரத்திற்கு பயன்தரத் தக்க முறையிலே உழைத்து, நாட்டின் பாதுகாப்பை பலப்படுத்த உதவி செய்யும் சோவியத் விஞ்ஞானிகள், கட்சியும், சர்க்காரும் அளிக்கும் தொடர்ந்த பயன்தரத் தக்க உதவியுடன், அணு சக்தி விஞ்ஞானம், கணிதம், இயந்திர சாஸ்திரம், சில தொழில் நுணுக்க விஞ்ஞானங்கள் உள்ளிட்ட பல அறிவுத் துறைகளிலே சிறப்பு மிக்க சாதனைகள் பல பெற்றுள்ளனர்.

அதே சமயத்தில், கலாச்சாரத் துறையில் தீவிரமான குறைபாடுகள் இருப்பதையும் காங்கிரஸ் குறிப்பிடுகிறது. நம்முடைய பள்ளி அமைப்பில் இருக்கக்கூடிய மிகப் பெரிய பலவீனம் என்னவென்ருல், அங்கு போதனை வாழ்க்கையிலிருந்து ஓரளவிற்கு பிரிக்கப்பட்டிருக்கிறது. பள்ளிப் படிப்பை முடித்து வருபவர்கள் நடைமுறை வேலைக்கு சரியானபடி தயாராக இருப்பதில்லை. பல தொழில் கல்வியை பள்ளிகளில் விரைவிலே புகுத்துவதற்கு, தொழில் விவசாய அடிப்படைகளை மாணவர்களுக்குப் போதிக்கும் புதிய பாடங்களைப் புகுத்துவதோடுமல்லாமல், திட்டமிட்ட முறையிலே தொழிற்சாலைகளிலும், கூட்டுப்பண்ணைகளிலும், அரசாங்கப் பண்ணைகளிலும், பரிசோதனை நிலையங்களிலும், பள்ளிகளைச்சேர்ந்த ஒர்க்-ஷாப்புகளிலும் நடைபெறும் வேலை முறையோடு அவர்களுக்குத் தொடர்பை உண்டாக்குவதும் அவசியமாகும்.

சுகாதாரமான சுற்றுச்சார்புள்ள இடங்களில் மாணவர்கள் தங்குவதற்கு ஏற்ற விடுதிகளுடன் கூடிய பள்ளிகளைக் கட்டவேண்டியது அவசர அவசியமாகும். அதிகப்படியான குழந்தை வளர்ப்பு நிலையங்களும். பாலர் பள்ளிகளும் கட்டப்படவேண்டும்; இந்த வேலையில் பொதுஜனக் கல்வி ஸ்தாபனங்களுடனும், அரசாங்கத்தின் கீழுள்ள நிலையங்களுடனும் சேர்ந்து கூட்டுப்பண்ணைகளும் பங்குகொள்ள வேண்டும்.

நிபுணர்களுக்கு அளிக்கும் பயிற்சியை, உற்பத்தியோடு மிக நெருங்கிய சம்பந்தம் கொள்ளுமாறு செய்து அதன் தரத்தை உயர்த்துவது ; உயர்நிலைக் கல்வி நிலையங்களை, உற்பத்தியோடு மிக நெருங்கிய சம்பந்தம் கொள்ளுமாறு செய்யக்கூடிய முறையில் அவை நிறுவப்படும் இடங்களைத் தேர்ந்தெடுப்பது ; நவீன தொழில் நுணுக்கத்தின் தரத்[illegible] பெறக்கூடிய முறையில் கல்வி ஸ்தாபனங்களின் வேலையைத் திருத்தி அமைப்பது ஆகியவை உயர்நிலைக் கல்வித்துறையில் செய்ய வேண்டிய பிரதான வேலைகளாகும். நம்முடைய இளம் இஞ்ஜினீயர்களும், விவசாய நிபுணர்களும், தங்களின் கல்வி நிலையங்களை விட்டு வெளியேறும் காலத்தில், உற்பத்தி ஸ்தாபனம் பற்றியும், பொருளாதாரம் பற்றியும் போதிய அளவு அறிவு பெற்றிருப்பது அவசியமாகும்.

நாட்டின் விஞ்ஞானக் கழகங்களை உற்பத்தியோடும், தேசியப் பொருளாதாரத்தின் விசேஷத் தேவைகளோடும் உள்ள தொடர்புகளைச் சகல வழிகளிலும் பலப்படுத்துவது ; பிரதான விஞ்ஞானத் தொழில் நுணுக்க பிரச்னைகளைத் தீர்க்கும் முயற்சிகளிலே கவனத்தைச் செலுத்துவது; கம்யூனிஸ நிர்மாணத்தின், நடைமுறைப் பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு விஞ்ஞானம் ஆற்றவேண்டிய பங்கை நிதானமாக உயர்த்துவது ஆகியவை எல்லாம் மிக அவசியம் என காங்கிரஸ் கருதுகிறது.

## சோவியத் அமைப்பின் அசைக்கமுடியாத பலம்

சோவியத் சமூக அரசியல் அமைப்பு மேலும் கெட்டிப்படுத்தப்பட்டிருப்பதும், தொழிலாளி வர்க்கத்திற்கும், கூட்டுப்பண்ணை விவசாயிகளுக்கு மிடையேயுள்ள கூட்டுறவு மேலும் பலப்பட்டிருப்பதும், சோவியத் யூனியனின் மக்கள் அனைவரிடையேயும் நேச உறவும், சகோதர ஒத்துழைப்பும் அதிகமாக பலப்படுத்தப்பட்டிருப்பதும் பரிசீலனைக்குரிய இந்த காலக்கட்டத்தில், கம்யூனிஸ்ட் கட்சியின் நடவடிக்கைகளால் கிடைத்த பலன்களில் மிக முக்கியமானவையென காங்கிரஸ் கருதுகிறது.

பொருளாதார, கலாச்சார வளர்ச்சித் துறையில் குடியரசுகளின் அதிகாரிகளுடைய உரிமைகளை விரிவுபடுத்த சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய கமிட்டி எடுத்துள்ள நடவடிக்கைகளை காங்கிரஸ் பூரணமாக அங்கீகரிக்கிறது. அன்றாடத் தொழில் நிர்வாகத்தைப் பொறுத்தவரை குடியரசு மந்திரிசபைகளின் உரிமைகள் இன்னும் அதிகப்படுத்தப்பட வேண்டும்; ஆனல், பொதுத் தலைமையில் திட்டக் குறிக்கோள்களை நிர்ணயிப்பதும், அவை அமுலாக்கப்படுவதை மேற் பார்வையிடுவதும், இயந்திரங்களை கொடுப்பதும், மூலதன முதலீட்டிற்கு வேண்டிய நிதியை அளிப்பது ஆகியவை எல்லாம் யூனியன் மந்திரிகளின் கையிறேயே இருக்கவேண்டும். இவ்விதம் செய்வதானது, அந்தந்த பிராந்தியங்களின் கிரியாம்ச முயற்சிக்கு அதிகமான வாய்ப்புகளை அளிக்கும்; யூனியனிலுள்ள குடியரசுகளை மேலும் கெட்டிப்படுத்தும். நம் நாட்டு மக்களின் நட்புறவைப் பலப்படுத்தும்.

சோஷலிஸமானது, தேசிய மாறுபாடுகளையும், விசேஷத் தன்மைகளையும் அழிப்பதற்குப் பதிலாக அவற்றின் சர்வாம்ச வளர்ச்சிக்கும், எல்லா தேசங்கள், தேசிய இனங்களின் பொருளாதார, கலாச்சார வளர்ச்சிக்கும் உத்தரவாதம் அளிக்கிறது என்கின்ற லெனினின் கோட்பாட்டையே கட்சி தன்னுடைய தேசிய இனக் கொள்கையின் அடிப்படையாக என்றுமே கொண்டிருந்தது. கட்சி தன்னுடைய நடைமுறை வேலைகளில் இந்த விசேஷத் தன்மைகளை தொடர்ந்து பூரணமாகக் கணக்கிலெடுத்துக் கொள்ளவேண்டும்.

### மக்கள் பங்கு அதிகரிக்க வேண்டும்

உழைப்பாளி மக்களின் படைப்புத் திறனையும், முன்முயற்சியையும் மேலும் தொடர்ந்து அதிகப்படுத்துவதும், நாட்டை ஆளுவதிலும், நாட்டின் நிர்வாக, பொருளாதார நடவடிக்கைகள் முழுவதிலும் மக்களை இன்னும் அதிகமாகப் பங்குகொள்ளச் செய்வதும் கம்யூனிஸ நிர்மாணத்திற்குத் தேவையான மாபெரும் கடமைகளாகும். இதை அடைவதற்கு சோவியத் ஜனநாயகம் எல்லா வழிகளிலும் வளர்க்கப்படவேண்டும் ; தேசீயரீதியிலும், ஸ்தல ரீதியிலும், அரசாங்க அமைப்பின் அங்கங்களின் வேலை முறை தொடர்ந்து அபிவிருத்தி செய்யப்படவேண்டும்; அவற்றிற்கும் மக்களுக்குமுள்ள தொடர்புகள் பலப்படுத்தப்படவேண்டும். நிர்வாக இயந்திரத்தின் செலவுகளையும் ஊழியர்களையும் குறைப்பதிலும் சமீப காலத்தில் ஒவ்வொரு இலாகாவின் வேலை முறையை அபிவிருத்தி செய்வதிலும், சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் கமிட்டி ஏற்கனவே பெற்றுள்ள சாதனைகளை காங்கிரஸ் அங்கீகரிக்கிறது; அதே சமயத்தில் இந்த வேலையைத் தொடர்ந்து நடத்தி, அதிகார வர்க்கப் போக்குகளுக்கு எதிராகவும் மக்களின் தேவைகளைப் பார்க்க மறுக்கும் போக்குகளுக்கு எதிராகவும், சமரசமற்ற போராட்டத்தை தொடர்ந்து நடத்தவேண்டும் என காங்கிரஸ் கருதுகிறது.

சோவியத் சட்டத்தை பலப்படுத்தி, சோவியத் அரசியல் சட்டம் அளித்துள்ள பிரஜைகளின் உரிமைகளை கண்டிப்பாக பின்பற்றுவதை உறுதி செய்வதற்கும் மத்திய கமிட்டி எடுத்துள்ள நடவடிக்கைகளைக் காங்கிரஸ் பூரணமாக அங்கீகரிக்கிறது ; எல்லா கட்சி, அரசாங்க ஸ்தாபனங்களும் கண் விழிப்புடன் இருந்து சட்டத்தைப் பாதுகாத்து சகல விதமான சட்ட விரோத நடவடிக்கைகளையும், எதேச்சாதிகார போக்கையும், சோஷலிஸ்ட் சட்டத்தையும், ஒழுங்கையும் மீறும் போக்கையும் கடுமையாக எதிர்த்து முறியடிக்க வேண்டுமென காங்கிரஸ், கட்டளையிடுகிறது.

கம்யூனிஸ்ட் கட்சியும், சோவியத் அரசாங்கமும் கம்யூனிஸ்டுகள், உழைப்பாளி மக்கள் ஆகியவரிடையே மிக உயர்ந்த அரசியல் உஷார்த் தன்மையை வளர்க்க வேண்டும் ; சோவியத் மக்களின் சமாதான பூர்வமான உழைப்பையும், சோஷலிஸ்ட் தாயகத்தின் பந்தோபஸ்தையும் நம்பிக்கையுடன் பாதுகாக்கின்ற வீரமிக்க ராணுவத்தை பலப்படுத்துவதற்கு அயராது உழைக்கவேண்டும்.

(அடுத்த இதழில் முடியும்)

# இந்திய (சுதேசி) வைத்தியக் கல்லூரியில் தலையீட்டுத் தாண்டவம்

## மந்திரி ஷெட்டி பதில் சொல்லுவாரா ?

நமது மக்களில் நூற்றுக்கு எண்பது பேருக்குமேல் கிராமங்களில் வாழ்கின்றனர். அவர்களுக்கு சுகாதார வசதி, வைத்திய வசதி செய்ய இங்கிலீஷ் வைத்திய முறையைமட்டும் கையாண்டால் போதுமான வசதிகள் அளிக்க முடியுமா ? முடியாது.

அதுமட்டுமல்ல நம்நாட்டு வளர்ச்சியில் வைத்திய துறையில் கண்டுபிடிக்கப்பட்டு, கையாளப் பட்டுவரும் இந்தியன் (சுதேசி) வைத்தியமுறை என்று சொல்லப்படும் ஆயுர்வேத' யூனனி, சித்த வைத்திய முறைகளை பாதுகாத்து, ஆதரித்து ஒரு தேசீய வைத்திய முறையைக் கையாள்வது ஐந்தாண்டு திட்டங்களின் முக்கிய அம்சமாக இருப்பது அவசியமாகும். ரஷ்யா, சீன முதலிய நாடுகளிலும் பல வைத்திய முறைகளை ஒன்ருக இணைத்து சிறந்த வைத்திய வசதியை அந்நாட்டு மக்களுக்கு அளித்துவருகிருர்கள்.

ஆனல் நம் ராஜ்யத்தில் இந்திய வைத்திய முறையை ஆதரிப்பதற்கு பதிலாக, சுகாதார மந்திரி ஷெட்டி தன்னிஷ்டம்போல் இந்திய வைத்திய முறையில் தலையிட்டு வருகிருர். இந்தப் போக்கை உடனே தடுத்து நிறுத்த வேண்டும் என்று இந்தத் துறையில் ஈடுபட்டுள்ள இதனல் பயனடைந்து வருவோர் அனைவரின் ஏகோபித்த வேண்டுகோளாகும்.

இந்திய வைத்திய முறைக்கு ஆதரவு அளிக்க வேண்டுமென்று நீண்ட நெடுங் காலமாக பலத்த பலபல கிளர்ச்சிகள் நடந்தன. 1947ல் இந்திய வைத்திய முறையைப் பரப்புவதற்காக இருந்த எல். ஐ. எம். என்ற வைத்திய பள்ளிக்கூடம் ஒரு கல்லூரி அந்தஸ்திற்கு உயர்த்தப்பட்டது. ஒரு வைத்திய நிபுணர்கள் கமிட்டி இந்த கல்லூரியில் கற்பிக்கப்பட வேண்டிய பாட முறைகளைப் பற்றி ஒரு நல்ல திட்டமும் தீட்டியது : இந்திய வைத்திய முறையுடன் ஆங்கில பரிசீலனை முறையும் இணைத்து பாடங்கள் வகுக்கப்பட்டன. இந்திய வைத்திய முறைக்கு 67 சதவிகிதமும், ஆங்கில பாடங்களுக்கு 33 சத விகிதமும் என்ற முறையில் பாட நேரங்கள் வகுக்கப்பட்டன. 10 பாடங்களில் 10 பரீக்ஷைகள் வகுக்கப்பட்டன. ஆனல் சுகாதார மந்திரி தனிப்பட்ட மாணவர்களுக்காக தனிப்பட்ட கவர்மெண்டு உத்தரவுகளை பிறப்பித்து வந்து, இன்று 5 பாடங்கள், 4 பரீக்ஷைகள் என்ற நிலைமைக்கு இந்திய வைத்தியக் கல்லூரியின் தரத்தை குறைத்துவிட்டார். அவர் பிறப்பித்த உத்தரவுகள் விவரங்கள் கீழ்வருமாறு.

### மந்திரி தலையீடு

### G. O. M. No. 3266 H. 4-9-53 மூலம்

சுபாஷ் சந்திர ஹெக்டே என்பவருக்கு வயது கூடியிருந்தும் விதிவிலக்கு அளித்து, கல்லூரி திறந்து 3 மாதமானபோதிலும், 100 மாணவர்கள் அனுமதிக்கப்பட்டு இடம் காலியில்லாதிருந்தும், அவரை 10வது மாணவராக சேர்த்துக் கொள்ளவேண்டும் என்று உத்திர விட்டார். (இந்த ஹெக்டே பிற்பாடு மந்திரியின் சகோதரியின் மாப்பிள்ளையாஞர் என்று தெரிகிறது.)

### G. O. No. 2326 H. 17—6—53 மூலம்

லலிதா ஷெட்டி என்ற மாணவி 'மெடிஸன்' பரீக்ஷையில் தேறவில்லை என்றபோதிலும், ஆஸ்பத்திரிக்கு ஒழுங்காக வருவதிலிருந்து விதிவிலக்கு அளிக்கப்பட்டது.

### G. O. No. 2420 H. 27—8—54 மூலம்

சில பாடங்கள் நீக்கப்பட்டதுடன், இதற்கு முந்திய மார்ச்சு—ஏப்ரல் பரீக்ஷையில் தேர்ச்சி பெருத மாணவர்களும், இந்தப் பாடங்களைப் பூர்த்தி செய்தவர்களாக கருதப்படுவார்கள் என்று உத்திரவு பிறப்பிக்கப்பட்டது.

இந்தமாதிரியான போக்குகளின் காரணமாக இன்று இந்திய வைத்திய கல்லூரியில் கீழ்க்கண்டுள்ள நிலைமை ஏற்பட்டுள்ளது :

### 1951ல்

இந்திய முறைக்கும், ஆங்கில முறைக்கும் சரிபாதி நேரம் ஒதுக்கலாமென்று சர்க்கார் முடிவு செய்தது. ஆனல் இந்த முடிவு இன்று அமுலில் இல்லை.

2446 மணிநேரம் (13 மாதங்களுக்கு) இந்திய வைத்திய முறைக்கும், 3219 (17 மாதங்களுக்கு) மணிநேரம் ஆங்கில வைத்தியமுறைக்கும் ஒதுக்கப்பட்டது.

### 1955--56ல்

1435 (9 மாதங்களுக்கும்) மணி நேரம் இந்திய வைத்தியமுறைக் 4195 (21 மாதங்களுக்கும்) மணி நேரம் ஆங்கில வைத்தியமுறைக்கும், ஒதுக்கப்பட்டிருக்கிறது.

இந்திய வைத்திய ஆஸ்பத்திரியில் இந்திய மருந்துகளுக்காக மூலிகைகள் வாங்கச் செலவிடப்படும் தொகையும் வருஷா வருஷம் குறைக்கப்பட்டு வந்துள்ளது.

1950–51ல் இந்திய மருந்துகளுக்காக 2 லக்ஷம் ரூபாய் செலவிடப்பட்டது.

1951–52ல் இது ரூ. 1,45,000 யாகக் குறைக்கப்பட்டது.

1952–53ல் ரூ. 95,000 யாகக் குறைக்கப்கப்பட்டது.

1953–54ல் ரூ. 55,000 யாகக் குறைக்கப்பட்டது.

1954–55ல் ரூ. 40,000 யாகக் குறைக்கப்பட்டுள்ளது.

பல்வேறு விதமான நோய்களுக்கு இந்திய வைத்தியசாலையில் 750 விதமான மருந்துகள் இருந்தன. இப்போது 90 விதமான மருந்து வகைகளே இருக்கின்றன.

இந்திய வைத்திய முறைக்காக 54 டாக்டர்களுக்கு ரு. 1,39,624 ஒதுக்கப்பட்டிருந்தது. இன்று 35 பதவிகளாகக் குறைக்கப்பட்டு அவர்கள் சம்பளமும் ரூ. 1,00,602 யாகக் குறைக்கப்பட்டுள்ளது. இதிலும்காலியான 6 பதவிகள் பூர்த்தி செய்யப்படாமலே இருக்கின்றன.

இந்தியமுறை சிகிச்சைக்காக 155 படுக்கைகள் ஒதுக்கப்பட்டிருந்தன. இன்று இதுவும் 126 படுக்கைகளாகக் குறைக்கப்பட்டுள்ளன.

சுகாதார மந்திரியும், சென்னை வைத்திய இலாக்காவும் நம்நாட்டு வைத்திய முறைகளை ஆதரிப்பதற்குப் பதிலாக, அவைகளைச் சீர்குலைக்க முற்பட்டுள்ளனர் என்று கூறினல் மிகையாகாது.

—நமது நிருபர்

# பிராவிடெண்ட் நிதி (3)

[கே. டி. கே. தங்கமணி]

1. முதல் இரண்டு கட்டுரைகளில், பிராவிடெண்ட் நிதி திட்டம் சம்பந்தமான முக்கியமான ஷரத்துக்களைப் பற்றியும் ரீஜனல் கமிட்டியின் முக்கிய முடிவுகள் பற்றியும் விளக்கினேன். இப்பொழுது, அது நடைமுறையில் நமது ராஜ்யத்தில் எப்படி அமுல் நடத்தப்படுகிறது என்பதைப் பார்ப்போம்.

2. ரீஜனல் பிராவிடெண்ட் பண்டு கமிஷனரின் காரியாலயம், தற்சமயம் சென்னை நகரில் மவுண்ட் ரோடில் 34-வது இலக்க கட்டிடத்தில் உள்ளது. சென்னை ராஜ்யத்தில் பிராவிடெண்டுபண்டு திட்டத்தை நிர்வகிக்கும் தலைமை அதிகாரி ரீஜனல் பிராவிடெண்டு பண்டு கமிஷனர்ஆவர். சென்னை, கோயமுத்தூர், மதுரை ஆகிய மூன்று வட்டாரங்களுக்கும் 3 பிராவிடெண்டு பண்டு இன்ஸ்பெக்டர்கள் இருக்கிறார்கள். தற்போது சென்னைக்கு ஸ்ரீ வி. சி. சாத்து மேனன் பி.ஏ., அவர்களும், கோயமுத்தூரில் ஸ்ரீ எம்.வி. எஸ். சௌத்ரி பி.ஏ., (ஹானர்ஸ்) அவர்களும், மதுரையில் ஸ்ரீ டபிள்யூ. எஸ். சிவசங்கரன் அவர்களும் இன்ஸ்பெக்டர்களாக இருக்கிறார்கள்.

3. ஏற்கெனவே குறிப்பிட்டவாறு இந்த திட்டம் 6 தொழில்களில் அமுல் நடத்தப்படவேண்டுமென்ருலுங்கூட, நமது ராஜ்பத்தில் 3 தொழில்களுக்குதான் அதாவது பஞ்சாலை, சிமிண்டு, எலெக்ட்ரிகல் மெக்கானிகல் அல்லது ஜெனரல் இன்ஜினீரிங் முதலிய தொழில்களுக்குத்தான் பிரயோகமாகிறது.

### எத்தனை பேர்?

1952 முதல் எத்தனை பாக்டரிகளில் அமுல் நடத்தப்பட்டது, எத்தனை பேர் சந்தாரர்களாகச் சேர்ந்துள்ளார்கள் முதலியவற்றின் விபரம்.

**(a) 1952—53-ல்**

| | | | | |
|---|---|---|---|---|
| சிமண்ட் | 5 | பாக் | 3595 | பேர் |
| இன்ஜினீரிங் | 83 | ,, | 17679 | ,, |
| பஞ்சாலை | 137 | ,, | 101243 | ,, |

**(b) 1953—54-ல்**

| | | | | |
|---|---|---|---|---|
| சிமண்ட் | 4 | பாக் | 2856 | பேர் |
| இன்ஜினீரிங் | 61 | ,, | 7930 | ,, |
| பஞ்சாலை | 114 | ,, | 68970 | ,, |

**(c) 1954—55-ல்**

| | | | | |
|---|---|---|---|---|
| சிமண்ட் | 3 | பாக் | 3866 | பேர் |
| இன்ஜினீரிங் | 56 | ,, | 5236 | ,, |
| பஞ்சாலை | 131 | ,, | 75988 | ,, |

**(d) 1-4-55 முதல் 30-11-55 வரை**

| | | | | |
|---|---|---|---|---|
| சிமண்ட் | 3 | பாக் | 3861 | பேர் |
| இனஜினீரிங் | 63 | ,, | 5913 | ,, |
| பஞ்சாலை | 136 | ,, | 78564 | ,, |

இதிலிருந்து சுமார் 90,000 பேர் இச்சட்டத்தினுல் இன்று பயனடைகிருர்கள் என்று தெரியவருகிறது. 35,000 தொழிலாளர்கள் வேலை செய்யக்கூடிய 15 பஞ்சாலைகளும் 28 இஞ்ஜினீரிங் தொழிற்சாலைகளும் விதிவிலக்களிக்கப்பட்டுள்ளது. பிராவிடெண்டு நிதி சட்டம் 16வது செக்ஷன்படி, சர்க்காரால் நடத்தப்படும் பாக்டரிகளுக்கும் ஸ்தல ஸ்தாபனங்களால் நடத்தப்படும் பாக்டரிகளுக்கும் விதிவிலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது.

### எவ்வளவு?

4. தொழிலாளர்கள் தகவல் அறிந்துகொள்ள வேண்டுமென்பதற்காக, பிராவிடெண்டு நிதிக்கு இரு சாராரும் எவ்வளவு கொடுத்திருக்கிருர்கள் என்பதை வருஷவாரியாகத் தெரிவிக்கிறேன். இதில் முதலாளிகளும் தொழிலாளர்களும் கொடுத்த நிதி உள்ளடங்கும். 1952–53 (நவம்பர் முதல் மார்ச் வரை) சுமார் 6 லட்சம் ரூபாய்! 1953–54.ம் வருடத்தில் 86 லட்சம் ரூபாய்! 1954–55 வருடத்தில் 86 லட்சம் ரூபாய்! 1955–56-ல் எட்டு மாதங்களில் 56 லட்சம் ரூபாய்! இத்துடன் நிர்வாகச் செலவுக்காக முதலாளிகள் பணம் கொடுத்திருக்கிருர்கள். சுருக்கமாகச் சொன்னுல், "புதிய தொழில்களைச் சேர்க்கப்படும் வரை, பிராவிடண்ட் நிதி திட்டத்தால் 1 லட்சம் தொழிலாளர் பயனடைவார்கள்; இத்திட்டத்தில் இதற்கான நிதி 1 கோடி ரூபாய்களாகும்!!

5. நிர்வாகச் செலவுக்கு முதலாளிகள்தான் பணம் கொடுக்கிருர்கள். பிராவிடண்டு நிதிக்கு தொழிலாளர்களும் முதலாளிகளும் கொடுத்திருக்கிற மொத்தப் பணத்தில் 3 சதவிகிதப் பணத்தைக் கொடுக்கிருர்கள். இன்ஸ்பெக்ஷன் செலவுகளுக்கு விதிவிலக்களிக்கப்பட்ட தொழிற்சாலைகள் முக்கால் சதமான பணம் கொடுக்கவேண்டும். இது வருஷத்துக்கு சுமார் 3 லக்ஷம் ரூபாய்களாகும். இதிலிருந்து நிர்வாகச் செலவு செய்யப்படுகிறது.

### வட்டி

6. பிராவிடெண்டு நிதியில் சேர்ந்தவர்களுக்கு, அவர்கள் செலுத்திய பணத்துக்கு ஏற்ப வட்டி கொடுக்கப்படும். இந்த வட்டியானது 1952—53-ம் வருடங்களுக்கும், 1953—54-ம் வருஷத்துக்கும், 1945—55-ம் வருஷத்துக்கும் 3 சதமானம்! 1955—56-ம் வருஷத்துக்கு 3½ சதமாகும்! மேற்கண்ட முறையில் ஆகும் வட்டியையும் நிதியுடன் சேர்த்துக் கொள்ளப்படும்.

7. 1954—55-ம் வருஷத்தில் உரிமையுள்ள தொகைக்கு சுமார் 5 லக்ஷம் ரூபாய் தொழிலாளருக்குச் செலுத்தப்பட்டதாகவும், 1955—56-ல் சுமார் 3 லக்ஷம் ரூபாய் செலுத்தப்பட்டதாகவும் எல்லா தொழிற்சங்கங்களும், எல்லாத் தொழில்களுக்கும் பிராவிடெண்டு பண்டுமுறை அமுலாக்க வேண்டுமென்றும், அதே சமயத்தில் தொழிலாளருக்கு நஷ்டமேற்படும்படியான குறைபாடுகளை நீக்கவேண்டுமென்றும் கிளர்ச்சி செய்யவேண்டும்.

8. இன்ஸ்பெக்டர்கள் மூன்று மாதங்களுக் கொருதடவை பாக்டரிக்கு வந்து விசாரிக்கவேண்டும். விதிவிலக்களிக்கப்பட்ட தொழிற்சாலைகளுக்கும் 6 மாதத்திற்கொருதடவை சென்று விசாரிக்கவேண்டும். பிராவிடண்டு நிதி செலுத்தப்பட்டதும், அனுப்பப்பட்டதும் சரியாக இருக்கின்றதா என்று பரிசீலிக்கவேண்டும். விதிவிலக்களிக்கப்பட்ட தொழில்கள் சம்பந்தமாக, அவைகள் தம் பிராவிடெண்டு நிதியில் 90 சதமான பணத்தை மத்திய சர்க்காரின் பாங்கியில் செலுத்தப்பட்டு, சரிவர அமுலாகி வருகிறதா என்று கவனிக்கவேண்டியது இன்ஸ்பெக்டர்களுடைய கடமை. சட்டத்தை மீறும் முதலாளிகளின்மீது நடவடிக்கை எடுக்க கமிஷனருக்கு அதிகாரமுண்டு 20 முறை நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டதாகவும், அவற்றில் பெரும்பாலானவை தண்டிக்கப்பட்டதாகவும் அறிய வருகிறேன்.

9. பிராவிடெண்ட் நிதிக்குக் கொடுக்கப்பட வேண்டிய பாக்கிப் பணத்தை செக்ஷன் 5ல் கண்டுள்ளவாறு வசூலிக்க, அதாவது, ராஜ்ய நிலவரி பாக்கி வசூல் சட்டப்படி நிலவரி பாக்கி வசூலிப்பது போல, வசூலிக்கப்படும். பாக்கியை வசூலிக்க ஜில்லாக் கலெக்டர்களைக் கேட்டுக்கொள்ளலாம். சென்னையில் சாமி பவுண்டரி முதலாளிகள், பாப்பினிசேரி ஆரன் ஸ்பின்னிங் அண்டு வீவிங் மில் நிர்வாகிகள், மதுரை நிட்டிங் கம்பெனி, வீரவநல்லூர் கார்த்திகேயன் மில்ஸ், கள்ளிக்கோட்டை பிரிமியர் ஹொய்சரி ஒர்க்ஸ் முதலிய முதலாளிகள்மீது, கேஸ் தொடுத்து, பாக்கித் தொகை வசூலித்திருக்கிருர்கள்.

10. பொதுவாக நோக்குமிடத்து, இந்தச் சட்டமும், இந்த திட்டமும் நமது ராஜ்பத்தில் திருப்திகரமான முறையில் அமுல் நடத்தப்பட்டு வருகிறது. இவற்றை மேலும் பல தொழில்களுக்கு விஸ்தரிக்க வேண்டிய கட்டம் வந்துவிட்டது. இன்றைய நிலைமையில் தொழிற் சங்கங்களே! நீங்கள் செய்யவேண்டிய தென்ன? சட்டத்திலும் திட்டத்திலு முள்ள குறைபாடுகளையும் பலஹீனங்களை அகற்றுவதற்காக சட்ட பூர்வமாகவும், மற்றும் பல வழிகளிலும் கிளர்ச்சி செய்யுங்கள்! அதே சமயத்தில், இத் திட்டத்தில் ஒவ்வொரு தொழிலாளியையும் கொண்டுவர பாடுபடுங்கள்! மற்றவை பின்னர்.

# சுருட்டுக் கம்பெனி கதவடைப்பு 50 பேர் பட்டினி

மதுரை நகரில் எஸ். எஸ். சொர்ண விலாஸ் சுருட்டு பாக்டரி நிர்வாகிகள் கடந்த 16–11–55 முதல் பாக்டரியைக் கதவடைப்பு செய்து, 3 முதல் 12 வருஷம் வரை சர்வீஸ் உள்ள 50 தொழிலாளர்களைப் பட்டினி போட்டு வருகிருர்கள். கம்பெனியைத் திறக்கவேண்டும், அல்லது உடனே கிராஜுவட்டியாவது தரவேண்டுமென்று ஜெனரல் ஒர்க்கர்ஸ் யூனியன் கேட்டதற்கும் இதுவரை பதில் இல்லை.

அதே சமயத்தில், தம்பம்பட்டி லக்கி கம்பெனியில் தயாரிக்கப்பட்ட சுருட்டுகளை, மதுரையிலும் மற்றும் பல ஊர்களிலும் தங்கள் விலாசத்தின் பேரில் விற்கிருர்கள். சர்க்கார் உடனே தலையிட்டு, கதவடைப்பு நாட்களுக்கு சம்பளமும், கம்பெனியைத் திறப்பதற்கும் ஏற்பாடும் செய்ய வேண்டும்.

★

# ரைஸ் மில் கதவடைப்பு 71 பேர் பட்டினி

மதுரை மில் தொழிலாளர் கூட்டுறவு ஸ்டோரைச் சேர்ந்த, செல்லூரிலுள்ள ரைஸ் மில்லை 19-9-55 முதல் கதவடைப்பு செய்திருக்கிருர்கள். இதில் 6 முதல் 14 வருடம் வரை சர்வீஸ் உள்ள தொழிலாளர்கள் 71 பேர் வேலை செய்தார்கள். 4 மாதங்களுக்கு மேலாக நிர்வாக டைரக்டர் போர்டு தலைவர் ஸ்ரீமான் எஸ். ஆர். வரதராஜுலு நாயுடு அவர்கள் தான்! கதவடைப்பு நாட்களுக்கு கூலி கிடைக்கவும், மில்லைத் திறக்கவும் மில் தொழிலாளர்கள் தம் சகோதர தொழிலாளர்களின் கிளர்ச்சிக்கு ஆதரவளிக்க வேண்டுமாய் ஜெனரல் ஒர்க்கர்ஸ் யூனியன் பொதுக்காரியதரிசி தோழர் எம்.என். ஆதிநாராயணன் அறிக்கை விட்டிருக்கிருர்.

★

# பம்பாயில் கண்டனம்

பம்பாய் தாராவி ஜனநாயக வாலிபர் சங்க பொதுக்கூட்டம் தோழர் ரமேஷ் தலைமையில் 26-2-56ல் நடந்தபோது, தோழர்கள் ஜீவாமீதும், எம். ஆர். வெங்கட்ராமன்மீதும் ஹர்த்தாலின் போது தடியடி நடத்தியதை ஆத்திரமுடன் கண்டித்தும், ஏ. கோவிந்தசாமி எம். எல். ஏ. மீதுள்ள வழக்கை வாபஸ்வாங்க வேண்டுமென்றும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

★

# பிப். 20 ஹர்த்தால் செய்திகள்

பிப்ரவரி 20 ஹர்த்தால் செய்திகள், புதுக்கோட்டை, கீரனூர், மதுக்கூர், ஆலங்கோட்டை, நாகை, கோட்டூர் மலையாண்டிப்பட்டணம், மணப்பாறை, அவணியாபுரம், ராமனுதபுரம், நாகலாபுரம், விஸ்வநாதப்பேரி, ராமச்சந்திரபுரம், கோவில்பட்டி, கடையநல்லூர், செங்கம் தாலூகா பக்கிரிபாளையம், சேலம் ஜில்லா டப்பாடி, ஜலகண்டபுரம், காஞ்சீபுரம்......மற்றும் ஏராளமான ஊர்களிலிருந்து வந்திருக்கின்றன.

எல்லா ஊர்களிலும் கம்யூனிஸ்ட், தி. மு. க., பி. சோ., சோஷலிஸ்ட், தமிழரசுக் கழகம், தொழிற்சங்க, விவசாய சங்கங்கள், படிப்பகங்கள் கலந்துகொண்டிருக்கின்றன. ஹர்த்தால், ஊர்வலம், பொதுக்கூட்டம், பல இடங்களில் போலீஸ் தடியடி, கைதுகள் நடைபெற்றுள்ளன.

விபரமாகப் பிரசுரிக்க இயலாமைக்கு வருந்துகிறோம்.

ஆசிரியர்.

# ராமுத் தேவர் உண்ணுவிரதம்

## கோதண்டராம் வீவிங் மில் கதவடைப்பு

## 160 பேர்கள் 40 நாட்களாகப் பட்டினி

உற்பத்தியைப் பெருக்கவேண்டும், மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்த வேண்டுமென்று சர்க்கார் பிரசாரம் செய்துகொண்டிருக்கும் அதேசமயத்தில் மதுரை கோதண்டராம் வீவிங் மில்லை 1—2—56 முதல் மூடிவிட்டார்கள் முதலாளிகள். அதனுல் 160 பேர் மனைவி மக்களோடு நிர்க்கதியாக பட்டினியால் துடிக்கிருர்கள். தொழில் தகராறு சட்டம் 25 எப். பிரிவுப்படி தொழிலாளர்களுக்கு வழங்க வேண்டிய ஆள்குறைப்பு நஷ்டஈடுப் பணம்கூட இதுவரையிலும் மில் நிர்வாகம் கொடுக்கவில்லை.

இது சம்பந்தமாக பஞ்சாலை தொழிற்சங்கம் 5–1–56-ல் மில் நிர்வாகத்துக்குக் கடிதமெழுதியது. லேபர் ஆபீஸரும் 30–1–56ல் கடிதம் எழுதினுர். பிறகு தொழில் மந்திரி ஸ்ரீ பக்தவத்சலம் 18-2-56 அன்று மதுரைக்கு வந்தபோது, மகஜர் சமர்ப்பிக்கப்பட்டது. நிர்வாகத்தினரிடம் அவர் நேரில், "நஷ்ட ஈடு தொகையையும் பாக்டரி சட்டம் 79-ன் படி லீவுச் சம்பளத்தையும் "உடனே கொடுக்கும்படிக் கூறினுர்.

### பாரபட்சம்

அப்படியிருந்தும் மில்நிர்வாகம் தங்களுக்கு வேண்டிய ஒரு சில ஐ. என். டி. யு. சி. காரர்களுக்கு மட்டும் லீவுச் சம்பளம் கொடுத்திருக்கிறது. பெரும்பாலான மற்ற தொழிலாளர்களுக்கு லீவுச் சம்பளம் தராமல், செங்கொடிச் சங்கத்திலிருந்து ராஜினுமாச் செய்து விட்டுவந்தால்தான் கொடுக்க முடியும்" என்று பிடிவாதம் பிடிக்கிறது.

### உண்ணுவிரதம்

முதலாளியின் பாரபட்சத்தையும் காலங்கடத்தும் குரூரப்போக்கையும் கண்டித்து ராமுத் தேவர் என்ற மில் தொழிலாளி 3–3–56 முதல் மில் கேட்முன்னுல் உண்ணுவிரதமிருந்து வருகிருர்.

எல்லா சங்கங்களும் மில் நிர்வாகத்தின் குரூரச் செயலைக் கண்டித்துக் கிளர்ச்சி செய்யுமாறு தொழிலாளர் தலைவர் வி. கார்மேகம் அறிக்கை விட்டுள்ளார்.

# பாக்கிய லக்ஷிமி மில் தேர்தலில் வெற்றி

பொள்ளாச்சி பாக்கியலட்சுமி மில்லில் ஒர்க்ஸ் கமிட்டித் தேர்தல் சென்றமாதம் நடைபெற்றது. சகல தொகுதிகளிலும் பாக்கிய லட்சுமி மில் தொழிலாளர் சங்கப் பிரதிநிதிகளான, தோழர்கள் கஸ்தூரி, சி. நடராசு, பி. பெருமாள், ரங்கசாமி, செல்லமுத்து ஆகியவர்கள் வெற்றி பெற்ருர்கள். எதிர்த்துப் போட்டியிட்ட பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்தின் கிளைச் சங்கப் பிரதிநிதிகள் தோற்றுப்போனுர்கள்.

# மதுரை, சிங்கை, ஹார்வி தொழிலாளர்க்கு வேண்டுகோள்

தூத்துக்குடி ஹார்வி மில் தொழிலாளர்கள் தங்களுடைய நியாயமான கோரிக்கைக்காக எடுத்த நடவடிக்கையையொட்டி கதவடைப்பு நடந்தது. பின்னர் 2 பேர் 1 மாத காலம் சஸ்பெண்டு செய்யப்பட்டுள்ளனர். 6 பேர் டிஸ்மிஸ் செய்யப்பட்டுள்ளனர். தூத்துக்குடி சங்கம் நேரடி நடவடிக்கை நோட்டீஸ் கொடுத்துள்ளது. இவை உங்களுக்கு விபரமாகத் தெரிந்திருக்குமென நம்புகிறேன்.

1948-ம் வருடத்தை தொடர்ந்து முக்கிய சங்க ஊழியர்கள் வேலையிலிருந்து நீக்கப்பட்டனர். அரசியல், வேலை செய்ததற்கு சம்பந்தமற்ற காரணங்கள். மதுரை, சிங்கை, தூத்துக்குடியில் 300 பேருக்கு அதிகமானவர்கள் நீக்கப்பட்டனர். அவர்களை மீண்டும் வேலையில் அமர்த்துவது ஹார்வி தொழிலாளர்களுடைய மிக முக்யமான கடமை நிர்வாகமும் இதில் நியாயம் வழங்கவேண்டும்.

நிற்க, புதிதாக 6 பேர் நிறுத்தப்பட்டார்கள் என்ருல், இதில் நான் ஆபத்தைக் காண்கிறேன். தொழிற்சங்க நடவடிக்கைகளில் தீவிரமாக முன்னணியில் நின்றவர்கள் இவர்கள். இவர்களைப் பாதுகாப்பது ஹார்வி தொழிலாளர்கள் கடமை. மேலும், தூத்துக்குடி தொழிலாளர் எடுக்கும் நடவடிக்கைக்குப் பக்கபலமாக நின்று சாத்தியமான நடவடிக்கைகளை எடுக்கவேண்டுமென மதுரை சிங்கை, ஹார்வி தொழிலாளர்களைக் கோருகிருேம்.

கே. டி. கே. தங்கமணி
பொதுக்காரியதரிசி
தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸ்

குறிப்பு: டிஸ்மிஸலுக்குப் பதில் 3 வாரம் சஸ்பெண்டு என்றும், 1 மாத சஸ்பெண்டு 15 நாள் என்றும் அறிகிறேன். ஓரளவு தூத்துக்குடி தொழிலாளரின் வெற்றியாகும்.

# மார்ச் 18

## தோட்டத் தொழிலாளர்கள் போனஸ் தினம்

அஸ்ஸாம், வங்காளத்திலுள்ள தோட்டத் தொழிலாளர்களுக்கு 1953, 1954ம் வருஷங்களுக்கு போனஸ் பூரணமாகக் கிடைத்து விட்டது. ஆனுல், சென்னை ராஜ்யத்தில் 1952, 1953ம் வருட போனஸ் தொழில் கோர்ட்டிலே! 1954-ம் வருட போனஸ் தொழிற் கோர்ட்டு முடிவுக்குப் பின்!

சட்டசபையில் தோழர் பி. ராமமூர்த்தியின் கேள்விக்கு தொழில் மந்திரி பதிலளிக்கும் போது, "தொழிற் சங்கங்கள் கோரினுல் புதிய கோர்ட்டு கிடைக்கும்" என்ருர். நிற்க, 1955-ம் வருட போனஸ் குறைவாகவே கொடுப்பார்களாம். ஆனைமலையில் தொழிலாளர்கள் போனஸ் வாங்க மறுத்துவிட்டார்கள். நீலகிரியிலும் மறுப்பு இயக்கம் வளர்ந்து வருகிறது. நீலகிரித் தோட்டத் தொழிலாளர் சங்கம் நீலமலைத் தோட்டத் தொழிலாளர் சங்கம், நீலகிரி ஜில்லா தோட்டத் தொழிலாளர் சங்கம் முதலியன ஒத்துழைக்கின்றன. தோட்டத் தொழிலாளரின் கோரிக்கையை வற்புறுத்த 18–3–56ஐ போனஸ் தினமாக அனுஷ்டிக்க வேண்டுமாய்க் கோருகிருேம்.

குணம், மணம் நிறைந்த
குரு பீடிகளை
உபயோகியுங்கள்
தயாரிப்பு:
C.R. வெங்கடாசலம், கோயமுத்தூர்

# தென்னாட்டில் தொழில் வ

# தேசிய ஐக்கியத்தை வலுப்படுத்தும்

## நிலச்சீர்திருத்தத்தில் தயக்கம் ஏன்?

## நிர்மாணத் திட்டங்களில் பாரபட்சம் எதற்கு?

### பட்ஜெட் விவாதத்தில் பி. ராமமூர்த்தி உரை

**சென்னை ராஜ்ய பட்ஜெட் பற்றிய பொதுவிவாதத்தில் எதிர்க்கட்சித் தலைவர் தோழர் பி. ராமமூர்த்தி எம்.எல்.ஏ. நிகழ்த்திய பேச்சின் சாரத்தைக் கீழே தருகிறோம்.**

**தென்னாட்டில் எஃகுத் தொழிற்சாலை உட்பட தொழில் வளர்ச்சிக்கு விசேஷ முக்கியத்துவமளிக்க வேண்டும் எனவும் இதன் மூலமே இந்திய ஒற்றுமையைப் பேணி வளர்க்க முடியும் எனவும் அவர் வலியுறுத்தினார்.**

**நிலச்சீர்திருத்த விஷயத்தில் சர்க்கார் அரை மனது குறைமனதாக இருப்பதையும் நிலப்பிரபுத்துவத்தின் பிடிப்புக்குத் தலைவணங்குவதையும் கண்டித்தார்**

மூன்று மாதங்களுக்கு முன்பாக இந்த ராஜ்யத்தில் இயற்கை கோர சுவரூபம் எடுத்து நான்கு ஜில்லாக்களில் வாழும் மக்களுக்குக் கஷ்டத்தைக் கொடுத்திருக்கிறது. இந்த மக்களுக்கு எனது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன். மனிதனுடைய உன்னதமான உணர்ச்சிகள் எல்லாம், உன்னதமான குணுதிசயங்கள் எல்லாம் கஷ்டம் ஏற்படுகிற காலத்தில்தான் வெளி வருகின்றன.

தமிழ்நாட்டில் புயலும் வெள்ளமும் ஏற்பட்டபோது, இதர ஜில்லாக்களில் வாழ்கின்ற தமிழ் மக்கள் எல்லோரும் தங்களுடைய உன்னதமான பண்பாட்டை, உன்னதமான குணுதிசயங்களை வெளிப்படுத்தும்முறையில் பல உதவிகளைச் செய்திருக்கிறார்கள். அதிலும் தொழிலாளி வர்க்கம் காட்டிய அன்புணர்ச்சி நல்ல பண்பாட்டுணர்ச்சி பாராட்டத்தக்கதாகும். தனிப்பட்ட ஸ்தாபனங்கள் எல்லாம் நிதி திரட்ட முன்வருவதற்கு முன்பே தொழிலாளர்கள் எவ்வித வேற்றுமையும் இன்றி கைகொடுத்து உதவ முன்னணியில் வந்திருக்கிறார்கள். அவர்களை நான் பாராட்டுகிறேன்.

#### ரூபாய் அணு கணக்கல்ல

இந்த வரவுசெலவுத் திட்டத்தை முதல் ஐந்தாண்டுத் திட்டம் முடிந்து இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் வர இருக்கிற கால கட்டத்தில் கொண்டுவருகிறோம். இதனைப் பரிசிலனை செய்கின்ற காலத்தில் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தினால் ஏற்பட்ட விளைவுகள் என்ன என்பதையும் பரிசிலனை செய்யவேண்டும். இது வெறும் ரூபாய் அணு கணக்கு அல்ல. ஒரு ராஜ்யத்தினுடைய பொருளாதாரத் திட்டத்தை வகுக்கும் போதே, அந்த ராஜ்ய மக்களின் பொருளாதார வாழ்வு எந்த வகையில் வளர்ந்து மேம்பாடு அடைந்து வருகிறது என்பதையும் பரிசிலனை செய்யவேண்டும்.

முதல் ஐந்தாண்டுத்திட்டம் நிறைவேறியது. பல நீர்ப்பாசனத் திட்டங்களை நாம் நிறைவேற்றியிருக்கிறோம். உணவுற்பத்தி அதிகரித்திருக்கிறது. உற்பத்தி 46 சதவிகிதம் அதிகமாயிருக்கிறது என்று கணக்குகள் கூறுகின்றன. இதனால் நிச்சயமாக நம்முடைய தேசியப் பொருளாதாரம் முன்னேறியிருக்கிறது என்று சொல்லலாம். இரண்டு கோடி ரூபாய்க்கு அயல் நாடுகளிலிருந்து உணவு இறக்குமதி செய்துவந்தது போக இன்றைக்கு நமது தேவையை நாமே உற்பத்தி செய்துகொள்ள முடிகிறது. அந்த இரு நூறு கோடி ரூபாய் தேசிய வருமானத்தில் அதிகரித்து இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்கிறோம். ஆனால் தேசியப் பொருளாதாரம் உயர்ந்திருக்கிறது என்று சொன்னால் போதுமா? தேசியப் பொருளாதாரம் உயர்ந்திருக்கிறது என்று சொல்வது பெருமைப்படத் தக்கதுதான். என்றாலும், இந்த நாட்டில் வாழ்கின்ற பொதுமக்களின் பொருளாதாரம் எப்படி இருக்கிறது என்பதையும் நாடு கவனிக்கவேண்டும்.

#### லாபத்தில் ரூ. 200 கோடி ஏற்றம்

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தினால் "பணக்காரர்கள் மேலும் பணக்காரர்களானார்கள் ஏழைகள் மேலும் பரம ஏழைகளானார்கள்" என்று அமிருதசரஸ் காங்கிரஸில், காங்கிரஸ் மந்திரி ஜெகஜீவன்ராம் கூறினார். புள்ளி விபரங்களும் இதையே காட்டுகின்றன.

1950-ம் வருடத்தில் தொழிற்சாலைகள் மூலம் வருமானம் ரூ. 318 கோடி. 1951ல் ரூ. 443 கோடியாக இருந்தது. 1952-ல் ரூ. 483 கோடியாகியது. 1953ல் ரூ. 481 கோடி. 1954-ல், 511 கோடி ரூபாயாகிவிட்டது. 1950ம் ஆண்டிலிருந்து 1954ம் வருடத்திற்குள் கிட்டத்தட்ட ரூ. 200 கோடி உயர்ந்திருக்கிறது. பணக்காரர் பணக்காரராகிறார்.

ஆனால் அதே தொழிற்சாலைகளில் வேலைசெய்யும் தொழிலாளர் வருமானம் 1950-ல் ரூ. 193 கோடியாக இருந்தது. 1954ல் ரூ. 203 கோடியாகத்தான் உயர்ந்திருக்கிறது. மொத்தத்தில் ரூ. 14 கோடிதான். உத்தியோகஸ்தர்கள் சம்பந்தப்பட்ட மட்டில் 1950ல் ரூ. 39 கோடி 1954ல் ரூ. 42 கோடியாகத்தான் உயர்ந்திருக்கிறது. மொத்தம் ரூ. 3 கோடிதான்.

முதலாளிகள் வருமானத்தைக் கொஞ்சம் கட்டுப்படுத்தி தொழிலாளர் நிலையை உயர்த்த சர்க்கார் என்ன திட்டம் போட்டிருக்கிறது? என்று கேட்டார்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் பற்றிக் குறிப்பிடும் பொழுது நமது சர்க்கார் மத்திய சர்க்காரிடம் ரூ. 398 கோடி ஒதுக்கும்படி கேட்டிருந்தும் ரூ. 261 கோடி தருவதாகக் கூறி இப்போது ரூ. 170 கோடியாகக் குறைத்திருப்பதை எடுத்துக் காட்டினார். இதனால் என்ன ஆகுமோ என்று சந்தேகிக்க இடமிருக்கிறதென்றும் இரண்டாவது ஐந்தாண்டு திட்டம் ரூ. 4,300 கோடி ரூ. 4,800 கோடிக்கு அதிகரிக்கப்பட்டும் நமது ராஜ்யத்திற்கு ரூ. 170 கோடியே கிடைக்கிறது இதனால் நாம் போட்ட பல திட்டங்கள் கோவிந்தா ஆகிவிட்டது என்றார்.

#### சர்க்கார் தலைவணங்கியது

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கனரகத் தொழில் வளர்ச்சி வேண்டும் என்ற கொள்கையை வரவேற்பதாயும், அவை சர்க்கார் துறையில் இருக்கவேண்டும் என்ற முடிவு தளர்த்தப்பட்டு அலுமினியம் கந்தகத் திராவகம் முதலிய தொழில்கள் தனியார் துறைக்கு விடப்பட்டிருப்பதையும் எடுத்துக் காட்டினார். தனியார் துறைக்கு ஒதுக்கப்பட்ட தொகை ரூ. 200 கோடியாக இருந்தது ரூ. 670 கோடியாக அதிகரிக்கப்பட்டது பெரு முதலாளிகள் நிர்ப்பந்தத்திற்கு சர்க்கார் தலை வணங்கியுள்ளதைக் காட்டுகிறது என்றார்.

வேலையில்லாத் திண்டாட்டம் பற்றிப் பேசுகையில் தொழில் வளர்ச்சி இல்லையேல் இப் பிரச்சினை தீராது எனவும் முதலில் ஒரு கோடி 20 லட்சம் பேர்களுக்கு வேலை கிடைக்கும் என்றவர்கள் இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் 80 லட்சம் பேர்களுக்கே வேலை கிடைக்கலாம் என்று எதிர்பார்ப்பதையும் எடுத்துக் கூறினார். புதிதாக வேலைக்குத் தகுதியுள்ளோர் வருடத்தில் 18 லட்சம் வீதம் 90 லட்சம் வரை வருவார்கள் எனவும், சென்னை ராஜ்யத்தில் தொழிற்சாலைகளுக்கு இடமில்லை என்றால் இங்கு மேலும் பலர் வேலையின்றித் திண்டாட நேரும் எனவும் கூறினார்.

#### சேலத்தில் அலுமினியத் தொழிற்சாலை

சேலத்தில் அலுமினிய தொழிற்சாலை அமைப்பது சம்பந்தமாக மத்திய சர்க்கார் ஒரு கமிட்டி நிறுவியது. ஆனால் முடிவில்லை. பீஹாரில் தாமோதர் திட்டத்திற்குப் பக்கத்தில் ஏற்கெனவே உள்ள கனடியன் அலுமினியக் கம்பெனி இன்னும் மூன்று கோடி ரூபாய் மூலதனத்தை விஸ்தரித்துக்கொள்ள சர்க்காரின் அனுமதி கோரியிருப்பதாகத் தெரிகிறது. இது ஏற்கப்பட்டால் தமிழ்நாட்டில் அலுமினியத் தொழிற்சாலை என்பது பகற் கனவாகவே இருக்கும்.

இதிலும் வேடிக்கை என்னவென்றால் அந்த அலுமினியத் தொழிற்சாலைக்கு மேட்டூரிலிருந்துதான் திரவருபமான கிளோரின் போயாகவேண்டும். இதற்கு ரயில் கட்டணம் அதிகம். மேலும் நம்மிடத்தில் மிக நேர்த்தியான பாக்சைட் கிடைக்கிறது. எனவே இத் தொழிற்சாலை ஏற்படுவதற்கு வேண்டிய வசதிகள் எல்லாம் அதிகமாக உள்ள பிரதேசம் இது.

இங்கு மக்களிடமிருந்து பணத்தை எடுத்து முடக்குவது சாத்தியமில்லை. சர்க்கார் இத்தகைய பெரிய தொழிற்சாலைகளை நடத்த முன்வரவேண்டும். மத்திய சர்க்காரை இவ்விஷயத்தில்வற்புறுத்த வேண்டும் என்றார்.

எஃகுத் தொழிற்சாலை விஷயத்தில் இந்த ராஜ்யத்தில் ஒரு பைலட் திட்டத்தை நடத்துவதுபற்றி இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தை இறுதியாக முடிவு செய்யும் போது நினைவில் வைத்துக்கொள்தாகச் சொல்லப்பட்டாலும், இறுதி நகலில் இதுபற்றி ஒன்றுமில்லை என்பதையும், இங்குகிடைக்கக்கூடிய இரும்புத் தாதுவை உபயோகப்படுத்துவதற்கு ஒரு பரிட்சார்த்தத் திட்டம்கூட கிடையாது எனவும் கூறினார்.

#### நெய்வேலியில் எஃகுத் தொழிற்சாலை

நெய்வேலி திட்டத்தை மத்திய சர்க்கார் எடுத்துக்கொண்டு துரிதமாக வேலை நடத்துவதை வரவேற்றும் இங்கு கிடைக்கும் பழுப்பு நிலக்கரியை உபயோகித்து உருக்குத் தொழிற்சாலை நிறுவ கிழக்கு ஜெர்மனியை அணுகினால் உதவி கிடைக்குமென்றும் முன்பு குறிப்பிட்டதை எடுத்துச் சொன்னார். ஆனால் பிரிகெட் செய்யவேண்டும் அம்மோனியம் சல்பேட் செய்ய வேண்டும், மின்சாரம் உற்பத்தி செய்யவேண்டும், என்றெல்லாம் திட்டங்கள் அடங்கியிருக்கின்றனவே தவிர உருக்குத் தொழில் ஏற்படுத்தத் திட்டம் இடம்பெறவில்லை என்றும், இதை ஏற்படுத்தப் போராடவேண்டும் எனவும் வலியுறுத்தினார்.

நாட்டில் ஒற்றுமையை ஏற்படுத்துவது பற்றிக் கூறுகையில் தட்சிணப் பிரதேசம் ஏற்படுவதால் ஒற்றுமை ஏற்படும் என்ற நினைவு தவறு என்று சுட்டிக்காட்டினார். பிரிவினை மனோபாவத்திற்கு அஸ்திவாரம் ஒரு பிரதேசம் மற்றொரு பிரதேசத்தைக் காட்டிலும் பின் தங்கி இருப்பதும், பின்தங்கியிருக்கும் பிரதேசம் துரிதமாகவளர்ச்சியடையவேண்டிய நடவடிக்கைகள் எடுக்காமலிருப்பதும்தானே ஒழிய மொழிப்பற்றுக் காரணமல்ல என்றார். இருக்கும் வருமானத்தை ஒட்டுமொத்தமாகக் கணக்கெடுத்து அந்தந்தப் பிரதேசங்களுக்கு அவசியமான வசதிகளைச் செய்யவேண்டியது முக்கியமென்றார்.

குடிசைத் தொழில்களைப் பற்றிக் கூறும்பொழுது அவற்றை பாதுகாக்க பயிற்சி கேந்திரங்கள் மட்டும் நிறுவினால் போதாது. அதன்மூலம் செய்யப்படும் பொருள்களுக்கு உள்நாட்டில் மார்க்கெட்டை விஸ்தரிக்கவேண்டும்; இதற்கு அடிப்படையாக கிராம மக்களின் வாங்கும் சக்தியும் வாழ்க்கைத் தரமும் உயர வேண்டும்.

கைத்தறித் துணிகளின் தரத்தை உயர்த்தி ஏற்றுமதி செய்து வெளிநாட்டுச் செலாவணியை பெற விரும்பும் மத்திய சர்க்கார் கைத்தறித் தொழிலில் ரேஷனலைசேஷனைப் புகுத்த விசைத் தறிகளைப் புகுத்தவேண்டும் என்கிறது. இதனால் பலர் வேலையில்லாமல் திண்டாட நேரும். இதைவிட ஏற்றுமதிக்கு மான்ய உதவி கொடுத்து அந்நியச் செலாவணியைப் பெறட்டும் என்றார்.

புதிய மில்கள் கூடாதென்றே சொல்லி நம் ராஜ்யத்தில் 27 ஸ்தாபனங்களுக்கு விசைத்தறிகள் போட்டு நடத்த டெக்ஸ்டைல் கமிஷனர் அனுமதி கொடுத்துள்ளார். சர்க்கார் பாக்டரி லைசன்ஸ் கொடுக்காவிடில் அவை நடவா. இவற்றைத் தடுக்க நடவடிக்கை எடுக்காவிடில் வேலையில்லாத்திண்டாட்டம் மேலதிகமாக வளரும் என்று எச்சரிக்கை செய்தார்.

#### சட்டத்தை அமுல் நடத்தினார்களா?

கிராம மக்கள் வாழ்க்கைத் தரம் பற்றிப் பிரஸ்தாபித்துப் பேசுகையில் முதல் ஐந்தாண்டுத் திட்டமே நிலச்சுவான்தார்களுக்கு 25 வாரம் போதுமென்று கூறியும் 60–40க்கு மசோதா கொண்டு வர ஐந்தாண்டுகளாயின. 1952ல் தஞ்சை ஜில்லாவில் 40 வாரம் என்று சட்டமிட்டும் அது அமுல் செய்யப்பட்டதா? என்று கேட்டார்.

விவசாய இயக்கம் இல்லாத தாலூகாக்களில் இந்த சலுகை கிடைக்கவில்லை என்பதை தமிழ் நாடு கா. ராமமூர்த்திக் கமிட்டியே ஒப்புக்கொண்டிருப்பதை எடுத்துக் காட்டினார். மக்கள் நிர்ப்பந்தத்தின் விளைவாக, நிறைவேற்றும் சட்டங்களை சரிவர அமுல் நடக்கின்றனவா என்று கண்காணிக்கும் திசையில் சர்க்கார் யந்திரம் கவனம் செலுத்தவில்லை என்று குற்றம் சாட்டினார்.

நிலவுடமைக்கு வரம்பு கட்டுவது விஷயமாக சர்க்கார் திரட்டியுள்ள புள்ளி விபரங்களின் பொள்ளல் தனத்தை ராமமூர்த்தி அம்பலமாக்கினார். இந்தக் கணக்கெடுப்பு நடந்தது சட்டசபைக்கே தெரியாது எவ்வித அறிவிப்பும் இருக்கவில்லை என்பதை இடித்துக் கூறி வருங்காலத்தை நிர்ணயிக்கத்தக்க இந்தவிபரம் திரட்டுவதில் விவசாயிகளிடம் சரிவரப் பதிவு செய்து கொள்ளும்படி வலியுறுத்தி யிருக்கவேண்டும் என்றார்.

#### சென்னையிலிருந்து சொந்த விவசாயமா?

கிராம அதிகாரிகளான கர்ணம் மணியகாரர்கள் பெரும் நிலப்பிரபுக்களின் கைப்பாவைகளாக இருப்பதையும் அவர்கள் எடுத்த கணக்கு சரியாக இராதெனவும் ஆட்சேபித்தார். இந்த ராஜ்யத்தில் 100க்கு 10 பேர் கூடக் குத்தகைதார் கிடையாது எனவும் சென்னை நகரில் உள்ள 9000 ஏகர் உடமையாளர் 6000 ஏகர் குத்தகைக்கும் 3000 ஏகர் சொந்த விவசாயம் நடத்துவதாகவும், இன்னும் 38000 ஏகர் வரை சொந்த சாகுபடி செய்வதாகவும் கணக்கிருப்பதை அம்பலமாக்கினார்.

நிலவுடமைக்கு வரம்பு கட்டு முன் நிலப்பிரபுக்கள் முன்னேற்பாடாக குடும்பத்திற்குள் பிரித்துக் கொள்ள இடமளிக்கப்பட்டிருப்பதையும், விவசாயிகளுக்கு நிலமில்லாது எத்தனை சமூக நலத் திட்டங்கள் வந்தாலும் வாழ்க்கைத் தரம் உயராது எனவும் கூறினார். நிலப்பிரச்சினை பற்றி வீண் தாமதம் செய்வதாயும் மேலிடத்தார் உத்தரவிட்டால் கூட— நிலப் பிரபுத்துவப் பிடிப்பு நாச வேலை செய்து வருவதையும் ஸ்தூலமாக்கினார்.

கடன் விஷயத்தில் கோவாபரேடிவ் சொஸைடிகள் மூலம் பணக்கார விவசாயிகளுக்கே கடன் கிடைக்கிறதெனவும், ஸ்டாம்பு வகையில் ரூ. 71 லட்சம் அதிகவருமானம் லேவாதேவிக்காரர்கள் போட்டுள்ள வழக்குகளை எடுத்துக்காட்டுகிறது எனவும் 1938ல் விவசாயக் கடன் மசோதா வந்தபொழுதே பொய்க் கடன் இருப்பதாக ஒப்புக்கொண்டார்கள் என்றும் இன்று உண்மைக் கடன் எத்தனை என்பதை நிர்ணயிக்க ஒரு ஸ்தாபனத்தை நிறுவ வேண்டும் எனவும் வலியுறுத்தினார்.

#### பாரபட்சம் கூடாது

சமூக நலத் திட்டங்களை எல்லோரும் வரவேற்கிறார்கள். ஆனால் இதில் தமது கட்சியைப் பலப்படுத்தும் போக்கு காணப்படுகிறது. கட்சிக்குள் செல்வாக்குள்ளவர் பக்கம் சர்க்கார் சாய்கிறது என்று குற்றம்சாட்டினார்.

காங்கிரஸ்காரர்களுக்குள் ளே இந்தப் போட்டியும் தகராறும் ஏற்பட்டிருப்பதற்கு உதாரணம் காட்டினார்.

ஈரோடு தாலூகா கொழாநல்லி என்ற கிராமத்தில் உள்ள மக்கள் 1953லேயே ஆஸ்பத்திரி கட்ட நிலமும் பாதிப் பணமும் கொடுத்தால் சமூகநலத் திட்டமூலம் கட்ட ஏற்பாடு செய்யப்படும் என்று அறிவிக்கப்பட்டது. ஒரு கமிட்டியும் அமைக்கப்பட்டது. கமிட்டித் தலைவர் மாகாண காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர் செல்வ குமாரசாமி கவுண்டர். அவர் தமக்கு விரோதியாக உள்ள இன்னுமொரு காங்கிரஸ்காரர் நிலத்தில்தான் ஆஸ்பத்திரி கட்ட வேண்டும் என்று பிடிவாதம் செய்கிறார்.

கிராம மக்கள் வேறு நிலம் தருகிறோம் என்கிறார்கள். இஷ்டபூர்வமாகவே நிலம் தரவேண்டும் என்று அதிகாரிகள் கூறுகிறார்கள். [illegible] தனிப்பட்டவர் பிடிவாதத்தில் அந்த இடத்தையே ஆர்ஜிதம்செய்ய உத்தரவுபோகிறது. இப்படியெல்லாம் தலையிட்டால் பொதுஜன ஒத்துழைப்பு எப்படிக் கிடைக்கும் என்று ராமமூர்த்தி கேட்டார்.

---

## பட் [illegible]

#### வெங்கடேச சோளகர்

புயல் வெள்ளக் கொடுமைகளால் மீளமுடியாதபடி கஷ்டப்படுகிறார்கள் மக்கள். வீடிழந்தவர்களுக்கு, குடும்பத்திற்கு ரூ. 30 கொடுக்கப்பட்டது போதாது. இதுவும் எல்லோருக்கும் கிடைக்கவில்லை. மக்கள் கமிட்டிகளை அதிகாரிகள் சரிவரப் பயன்படுத்தவில்லை.

மன்னார்குடி முதல் முத்துப்பேட்டை வரையில் பத்து மைல் நீளம் ஐந்து மைல் அகலம் ஒரே வெள்ளக்காடாக இருந்தது. உள்ளே செல்ல வழியில்லை. ஜீப் கார்கள் கிடைக்கவில்லை. 7-ந் தேதிக்குப் பிறகுதான் உதவிபுரிய முடிந்தது. இதைத் தவிர்த்திருக்க வேண்டும்.

ஸ்தல அபிவிருத்தித் திட்டங்களைத் தாலூகா வாரியாக சரிவர வகுக்கவேண்டும். மக்கள் ஒத்துழைப்பைப் பெற்று இவற்றை நிறைவேற்றவேண்டும். அதிகாரிகள் நினைத்தால் செய்வது இல்லையேல் கிடையாது என்ற நிலை போகவேண்டும்.

புயல் நிவாரணத்திற்காகத் திரட்டிய பால் துணி முதலிய பொருள்கள் இன்னும் இருக்கின்றன. இவற்றை ஜனப்பிரதிநிதிகள் கையில் கொடுத்து வினியோகம் செய்யவேண்டும். அல்லாது ரெவின்யூ அதிகாரிகளின் உத்தரவுப்பிரகாரம் கிராம அதிகாரிகளிடம் விட்டு விட்டால் ஊழல்கள் தலைவிரித்தாடும் என்று கூறினார்.

#### பி. சொக்கலிங்கம் பிள்ளை

சர்க்காரின் எண்ணங்கள் நல்லதாக இருப்பினும் திட்டங்களின் முழுப்பிரயோசனமும் மக்களுக்குப் போய்ச்சேர உத்தரவாதம் அவசியம். இந்த விஷயத்தில் சர்க்கார் அதிகாரிகளை மாத்திரம் நம்பியிருக்கிறது. அதிகார வர்க்க மனப்பான்மை மாறவில்லை மாறவில்லை என்பதை [illegible] இது எடுத்துக்காட்டுகிறது.

சிறு நீர்ப்பாசன வசதிகளை ஏற்று நடத்த வேண்டுவது அவசியம். கிராம உத்தியோகஸ்தர்கள் நலவுரிமைகள் புறக்கணிக்கப்பட்டுள்ளன. இது கூடாது. லஞ்ச ஊழல்களைத் தடுத்து நிறுத்த வேண்டும். நல்ல ரோடுகள் போடப்படவேண்டும்.

#### ப. ஜீவானந்தம்

தட்சிணப் பிரதேச யோசனையைப் பொறுத்த வரையில் தமிழ்

# வளர்ச்சி

## அன்னசமுத்திரம் கண்மாய் நிலம்

### நிலமில்லாதாருக்குத் தருவதாய் மந்திரி உறுதிமொழி

மதுரை ஜில்லா கொடைக்கானல் ரோடுக்கருகிலுள்ள அன்னசமுத்திரம் கண்மாயிலிருந்து பஸ் முதலாளி ஜெயராஜ நாடாரால் ஆக்கிரமிக்கப்பட்டு விவசாயம் நடத்தப்பட்டு வந்த ரூ. $1\frac{1}{2}$ லட்சம் பெறுமானமுள்ள நிலத்தில் 30 ஏகர்கள் சர்க்காரால் திருப்பி வாங்கப்பெற்றுள்ளது என்றும் இந்த நிலம், நிலமில்லா விவசாயிகளுக்கு நிலம்என்ற கொள்கையின் அடிப்படையில் வினியோகம்செய்யப்படும் என்றும் ரெவின்யூ கோரிக்கைகள் விவாதத்தின் இறுதியில் மந்திரி மாணிக்கவேலு நாயக்கர் உறுதியளித்தார்.

மதுரைக்குப் பக்கத்தில் கொடைக்கானல் ரோடில் அன்ன சமுத்திரம் கண்மாயில் சுமார் $1\frac{1}{2}$ லட்டம் ரூபாய் மதிப்புள்ள 46 ஏக்கர் நிலத்தை ஒரு பஸ் முதலாளியான ஜெயராஜ நாடார் ஆக்கிரமித்துக்கொண்டு சுமார் பல வருடங்களாக சாகுபடி செய்திருக்கிறார். அவர்மீது எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. 30 ஏக்கரே மீட்கப்பட்டது. சாதாரண விவசாயிகள் இப்படிச் செய்திருந்தால் எவ்வளவு சீக்கிரத்தில் வெளியேற்றுவார்கள். பயிரை அழித்துக்கூட வெளியேற்றுவார்கள் அதிகாரிகள்.

எனவே பாரபட்சமாக அதிகாரிகள் இருக்கும்வரையில் மக்களுக்கு எந்தெந்தக் காரியங்களைச் செய்யவேண்டும் என்று சர்க்கார் நினைக்கிறார்களோ அந்த பலன்கள்கூட மக்களிடம் போய்ச் சேருவதில்லை.

# மத்திய சர்க்கார் பட்ஜெட்

## மக்கள்மீது வரிப்பளு

மத்திய சர்க்கார் வரவு செலவுத் திட்டத்தைப் பற்றி **நியூ ஏஜ்** நிருபர் டேவிட் கோஹன் எழுதியுள்ள குறிப்புகளைச் சுருக்கமாகத் தருகிறோம்:

இது மிக கெட்டிக்காரத் தனமாக சித்திரித்து உருவாக்கப்பட்ட தேர்தல் பட்ஜெட். நிதிமந்திரி தேஷ்முக் மக்கள்மீது மேலும் மேலும் பளுவைத் திணித்திருக்கிறார். ஆனால் முதல் பார்வையில் இதைக் காண முடியாது.

என்ன வரும் என்று பரபரப்புடன் எதிர் பார்த்திருந்த லோக [illegible]பையில் நிதி மந்திரி பட்ஜெட்டை சமர்ப்பித்தார். போனஸ் பங்குகள்மீது இரண்டணு வரி, ஆறு சத விகிதத்திற்கு மேல் கிடைக்கும் லாபப் பங்கீட்டின் மீது உபரிவரி, பதிவு செய்யப்பட்ட கம்பெனிகள்மீது வரி வினியோகிக்கப்படாத சில கம்பெனிகளின் லாபங்களுக்கு அளித்துவந்த ரிபேட்டை ரத்தாக்குவது, ரூ. 70,000க்கு மேலுள்ள வருமானங்கள்மீது உபரி வரியைச் சிறிது அதிகரிப்பது இவைபற்றி பொதுவான திருப்தி நிலவியது.

ஆனால் இவை எல்லாம் சேர்ந்தும் பத்துக் கோடி ரூபாய்கள்தான் வருவாயாகக் கிடைக்கும். பெரு முதலாளிகளைப் பொருத்தவரை ஒரு கொசு கடித்ததுபோலத்தான்.

சோஷலிஸ்ட் வடிவ சமூகம் தமக்கு என்னென்ன ஆபத்துக்களை விளைக்குமோ என்று கல்கத்தா முதலிய நகரங்களிலிருந்து கவலையுடன் வந்து பார்லிமெண்டில் விசிட்டர் காலரிகளில் அமர்ந்து கண்காணித்து வந்த பிரிட்டிஷ் முதலாளிகள் தாங்கள் அஞ்சிய அளவுக்கு ஆபத்தில்லை என்றறிந்து கொண்டார்கள். இந்தியப் பெரு முதலாளிகள் அப்பாடா! என்று மூச்சுவிட்டனர்.

### பற்றுக்குறையின் விளைவு

ஆரம்பத்தில் பட்ஜெட்டைப் பற்றிய பல கருத்துக்கள் உலவின. சமூகத்திலுள்ள மேல்தட்டுக்காரர்கள்மீது இன்னும் துணிச்சலாக வரிகளைப் போட்டிருக்கலாம் என்ற உணர்ச்சி தெட்டத் தெளிவாக இருந்தது.

பற்றுக்குறை பட்ஜெட்டின் காரணமாக நோட்டுகள் அதிகமாக அடிக்கப்பட்டு வெளியிடப்படும். இதன் விளைவாக மக்களுக்கு ஏற்படப்போகும் கடுமையான தொல்லைகள் பல. இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம் சராசரி ரூ. 250 கோடி பற்றுக்குறைக்குத் திட்டமிட்டிருக்கிறது. ஆனால் இந்த ஆண்டில் நிதிமந்திரி தேஷ்முக் ரூ. 256 கோடி பற்றுக்குறை காட்டுகிறார். இதனால் வாழ்க்கைச் செலவு உயரும், விலைவாசிகள் அதிகரிக்கும். "மறைமுகமான வரிகள்மீது அதிகமான நம்பிக்கை வைத்திருப்பது ஓர் உற்சாகமான அம்சம்" என்று இதைப்பற்றி கல்கத்தா ஸ்டாக் எக்ஸ்சேஞ்சில் விமர்சனம் எழுந்தது.

பெருமுதலாளிகள்மீது போடப்படும் வரிகள் ரூ. 10 கோடி வருவாயளிக்கிறது. நிதிமந்திரி ரூ. 25 கோடி கலால் வரிகளை ஏற்றி சாமான்ய மக்கள்மீது திணிக்கிறார்.

### வரிகள்! வரிகள்!

மோட்டா வேஷ்டிகள் புடவைகளைத் தவிர இதர பருத்தித் துணிவகைகள்மீது சதுர கஜத்திற்கு அரையணு வரியை மீண்டும் சுமத்துவது மிகமிக ஆட்சேபிக்கத் தகுந்த நடவடிக்கை. சிறு சிறு சோப் உற்பத்தியாளர்கள் பாதிக்கப்படுகிறார்கள். லிவர் பிரதர்ஸ் போன்ற பெரிய சோப் கம்பெனிகளுக்கு வரி போடலாம் என்றும் சிறு உற்பத்தியாளர் மீது போடக்கூடாது எனவும் கம்யூனிஸ்ட்கள் மிக முன்னரே அபிப்பிராயப்பட்டிருக்கிறார்கள். தபால் தந்திக் கட்டணங்கள் உயர்வு சமான்ய மக்களையே பாதிக்கும்.

டீஸல் எண்ணெய்மீது ஏற்றப்பட்டுள்ள கட்டணத்தின் விளைவாக கிராமப்பகுதிகளில் விவசாயிகள் பாதிக்கப்படுவார்கள். பஸ் கட்டணங்கள் அதிகரிக்கப்படும்.

பெருமுதலாளிகள் மீது மேலும் வரிகள் போடப் போதிய வாய்ப்புகள் இருக்கின்றன.

### பெருமுதலாளிகள்மேல்

எவ்வித கட்டணமும் இன்றி பங்குகளை மாற்றுவதை அனுமதிக்காமல் இருந்தால் ஸ்டாம்புகள் மூலம் வருமானம் கிடைக்கும். வர்த்தகத்தை சர்க்கார் ஏற்று நடத்த முன்வந்தால் பெரியளவு வருமானம் பெறலாம்.

தேயிலைத் தொழிலில் அமோகமான லாபமடித்த காலத்தில் தொழிலாளருக்குச் சம்பளத்தை உயர்த்த முதலாளிகள் இடமே கொடுக்கவில்லை. ஆனால் இந்த முதலாளிகளுக்கு உபகாரமாக ஏற்றுமதி வரியைக் குறைத்து உதவ முன்வருகிறது சர்க்கார்.

வரிகளைச் சரிவரக் கொடாது

(9-ம் பக்கம் பார்க்க)

# பட்ஜெட் மீது பொதுவிவாதம்

நாட்டின் எதிர்ப்பை மக்கள் தெட்டத் தெளிவாக எடுத்துக் காட்டி விட்டார்கள். இந்த சபையிலும் சர்க்கார் கட்சியிலும் பெரும்பாலோர் இந்த யோசனையை எதிர்ப்பவர்கள் என்று நம்புகிறேன். துரதிருஷ்டவசமாக 20ந் தேதி நடந்த ஹர்த்தாலைப் பற்றிப் பிரதமர் மந்திரி நேரு குறிப்பிடுகையில் இது இந்திய யூனியனிலிருந்து பிரிந்து போக விரும்புவோர் நடத்தியது என்று கூறினர். உண்மை அதுவல்ல. பிரிவினை நோக்கம் கிஞ்சிற்றுமில்லை என்பதை கூட்டணியினர் எடுத்துக்கூறியிருக்கின்றனர்.

இந்த வரவு செலவுத் திட்டத்தை சென்ற ஆண்டுடன் ஒப்பிட்டுப் பார்த்தால்—நீர்ப்பாசனம் மின்சார அபிவிருத்தி விவசாயம் கைத்தொழில் துறைகளில் முன்னேற்றம் காணவிழைகிறது. குடிசைத் தொழில் வளர்ச்சி பிரதானம் என்கிறது. குடிசைத் தொழில் அபிவிருத்தியால் சில முன்னேற்றங்கள் ஏற்படுவது வாஸ்தவம். ஆனால் இது வறுமையைத் தீர்க்காது.

அடிப்படையான பிரச்சினை விவசாயப் பிரச்சினை இதுபற்றி சர்க்கார் கண்ணோட்டம் என்ன? 1961க்குள் நிலவுடமைக்கு வரம்பு கட்டப்படவேண்டும் 75-25 என்ற விகிதத்தில் நியாய வாரம் நிர்ணயிக்கப்படவேண்டும் என்று திட்டக் கமிஷன் கூறுகிறது.

இதை உள்ளத்தில் கொண்டு நமது ராஜ்யத்தில் நாம் விவசாயச் சட்டங்களைப்போட ஆரம்பித்திருக்கவேண்டும். ஆனால் அப்படிச் செய்யவில்லை. 40–60 யோசனை பொறுக்குக் கமிட்டியில் இருக்கிறது.

"ஆழ அமுக்கி முகக்கினும்
..................
நாழி முகவாது நானுழி"

என்றபடி இதனால் பிரச்சினைக்குத் தீர்வு காணமுடியாது. இதை அடிப்படை என்று சர்க்கார் கருதியிருந்தால் தக்க சட்டங்களை உறுதியாக நிறைவேற்றியிருக்க முடியும். நிலப் பங்கீடு விஷயத்தில் மக்கள் நிர்ப்பந்தம் இருக்கும் இடங்களில் சிறிது அசைந்து கொடுப்பதல்லால் சர்க்காரே முன்கை எடுத்து நடத்த முன்வரவில்லை.

நாற்பது லட்சம் ஏகர் சர்க்கார் புறம்போககு நிலம் இருக்க வருடத்தில் ஜில்லாவுக்கு 50, 60 ஏக்கர்களை பண்படுத்திக் கொண்டு வருகிறது. ஏன் இந்தக் கஞ்சத்தனம்? மக்களிடமிருந்து நிலம் கோரி எண்ணற்ற மகஜர்கள் வந்தும் ஒன்றும் செயல்படவில்லை.

புயல் நிவாரணத்தில் சகல கட்சிகளும் ஒத்துழைத்தன. தொழிலாளிவர்க்கம் முன்னணியில் நின்றது. தேசப் புனர்நிர்மாணத்தின் முக்கியத்துவப்பற்றியும் தொழிலாளரின் கடும் உழைப்புத் தேவை என்றும் பிரதமர் நேரு வலியுறுத்தி வருகிறார். கடும் உழைப்புக்குத் தொழிலாளர் தயார். ஆனால் அதற்குரிய உற்சாகம் வேண்டாமா?

1600 டிராம்வே தொழிலாளர் இன்னும் திண்டாடித் தெருவில் நிற்கிறார்கள். பம்பாய் கோர்ட் அவர்களுக்கு எட்டு லட்சம் ரூபாய் சேரவேண்டும் என்று முடிவு செய்தும் இன்னும் ஒரு அம்மன் காசைக்கூட அவர்கள் காணயில்லை. சர்க்கார் இந்த விஷயத்தில் ஜரூராக இல்லாமல் ஏனோதானோ என்றிருக்கிறது. நமது நாட்டுப் பொருளாதாரத்தின் உள்ளடக்கத்தையும் உருவத்தையும் மாற்றும் முக்கியத்துவம் வாய்ந்தது நெய்வேலித் திட்டம். இதில் பழிவாங்கப்பட்ட 300 தொழிலாளருக்கு இன்னும் வேலை கொடுக்கப்படவில்லை. தொழிலாளர் நலன்களை நன்கு கவனித்து உற்சாக மூட்டினால் தானே அவர்கள் மனப்பூர்வமாக வேலையில் ஈடுபடமுடியும்.

சர்க்கார் டிரான்ஸ்போர்ட்டில் பெரிய லாபம் கிடைத்திருக்கிறது. வெளியே உள்ள தனிப்பட்ட கம்பெனிகள் போனஸ் கொடுக்கின்றன. சர்க்கார் போக்குவரத்தில் சென்ற ஆண்டு போனஸ் தருவதாக வாக்களிக்கப்பட்டது. இப்போது இல்லை என்று கைவிரிக்கப்படுகிறது.

உணவு துணி போல வீட்டுப் பிரச்சினையும் முக்கியமானது சென்னை ஜனத்தொகையில் கால்வாசி நடைபாதைகளிலும் குப்பக் குடிசைகளிலும் வாழ்கின்றனர். காக்ஸ் சேரி பிரிக்கப்பட்டு நகராகி நடுத்தர வர்க்கத்தினருக்கு வீடுகளை வழங்கியது. வீடுகள் கட்டும் விஷயத்தில் ஏழை மக்களை கவனத்தில் கொள்ளவேண்டும் என்றார்.

### வி. மதனகோபால்

சமுதாயத் துறையில் முன்னேற்றம் காண தொழில்வளர்ச்சி இன்றியமையாதது. அதோடு நாட்டிலுள்ள விவசாயிகள் நிலைமையில் அபிவிருத்தி ஏற்பட வேண்டும். இதுபற்றி பட்ஜெட்டில் தெளிவு இல்லை. நில சம்பந்தமாக நம் ராஜ்யத்தில் பார்த்தால் 30 ஏகர் நிலத்திற்குமேல் நிலவுடமையுள்ளவர்களிடம் 60 லட்சம் ஏகர் நிலம் இருக்கிறது. இதை எடுத்து நிலமில்லாதாருக்கு அளிக்கவேண்டும், ஏகருக்கு ரூ. 50 ரூபாய் என்றால்கூட ரூ, 30 கோடி வருவாய்க்கு வாய்ப்புண்டு.

விவசாயிகள் கடன்களைத் தீர்ப்பதற்கு இன்னும் தக்க வழி செய்யப்படவில்லை. குறைந்த விகித வட்டியில் கடன் வசதி இல்லை. இதற்கு வகை செய்யவேண்டும்.

நீர்ப்பாசன விஷயத்தில் பெரிய திட்டங்கள் பூர்த்தி செய்யப்பட்டாலும் இன்னும் இடமிருக்கிறது. திண்டுக்கல்லில் குடவனாறு இருக்கிறது. இதிலிருந்து 35 ஆயிரம் ஏகர் பூமிக்கு நீர்ப் பாய்ச்சலாம். இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் இதை எடுத்துக் கொள்ளவில்லை.

தேசிய விஸ்தரிப்புத் திட்டங்கள், செல்வாக்குப் படைத்தவர்கள் பெரிய மனிதர்கள் உள்ள இடங்களில்தான் அமுலாக்கப்படுகின்றன. எனது தொகுதியில் ஒரு திட்டம் போடப்பட்டது. கலெக்டர் நேரில் வந்தார். விசாரித்து முடிவுகள் எடுக்கப்பட்டன. ஆனால் அடுத்த மாதமே அத் திட்டம் வேறு பிரதேசத்திற்கு மாற்றப்பட்டது. இதற்குக் காரணமென்ன? பிரதேசத்திற்குப் பிரதேசம் பாரபட்சம்தானே!

கைத்தறித் துறையில் பவர்லூம்கள் புகுத்தப்பட்டால் அக் கைத்தொழில் பெரிதும் பாதிக்கப்படும். தோல்பதனிடும் விஷயத்தில் வெள்ளை நிபுணர்களை நம்பியிராமல் முன்னேற்ற மடைந்துள்ள நாடுகளின் அனுபவத்தைப் பெற முயலவேண்டும்.

இம் மாகாணத்திலிருந்து 50 லட்சம் டன் ஆட்டு ரோமம் ஏற்றுமதியாகிறது. அதைப் பயன்படுத்தி கம்பளத் தொழிலை இங்கு ஏற்படுத்த வேண்டும்.

### டி. எஸ். அர்த்தனாரி

கைத்தறி சம்பந்தமாக திருப்திகரமான நிலை இருப்பதாக நிதி மந்திரி கூறினார். ஆனால் அத் துறைபற்றி நிச்சயமான ஒரு திட்டத்தையும் குறிப்பிடவில்லை. கார்வே கமிட்டி சிபார்சுகளைப் பற்றி அவர் பிரமாதமாகக் கூறினார். ஆனால் அதன் சிபார்சுகளை மத்திய சர்க்கார் ஏற்றுக்கொண்டிருப்பதாகத் தெரியவில்லை.

கைத்தறித் துணிகளின் பாதுகாப்புக்காக ஒன்றரைக் கோடி ரூபாய் இருப்பதாகச் சொல்கிறார். இதனால் மட்டும் பாதுகாவல் கிடைக்குமா? தொழிலுக்கு உத்தரவாதம் வேண்டாமா? தொழிலாளர் கூலியை நிர்ணயம் செய்ய வேண்டும், துணியின் விலையை நிர்ணயிக்க வேண்டும், தரத்தையும் குறையாது பார்த்துக்கொள்ள வேண்டும்.

இதை சாதிக்க நூலின் விலையைக் கட்டுப்படுத்த வேண்டும். பஞ்சின் விலை குறைந்திருந்தும் நூல்விலை ஏறி நிற்கிறது. பாக்டரி முறையில் கைத்தறிகள் நடத்தப்பட வேண்டும்.

செஸ் நிதி மிகவும் மோசடிக்குள்ளாகியிருப்பதை நான் சுட்டிக்காட்டியிருக்கிறேன் இதை சர்க்கார் விசாரித்து நடவடிக்கை எடுக்க வேண்டும்.

# அரசியல் கைதிகளுக்கு எதிராகப் பழிவாங்கும் வெறி

## பம்பாய் சிறையில் அவதி

சம்யுக்த மஹாராஷ்டிர ராஜ்யம் கோரிப் போராடிய தேசாபிமானிகள் போர்த்துகீசிய ஒற்றனைவிடக் கேவலமாக நடத்தப்படுகிறார்கள் பம்பாய் சிறைகளிலே. அரசியல் கைதிகளைப் பழிவாங்கும் வெறி தலைவிரித்தாடுகிறது.

அகில இந்தியக் கிஸான்சபை தலைவர், மஹாராஷ்டிர கம்யூனிஸ்ட் தலைவர் **நானாபடில்** இரண்டாம் வகுப்பில் வைக்கப்பட்டிருக்கிறார். 1942-ல் தலைமறைவாக இருந்து பிரிட்டிஷ் ஆட்சியின் நெஞ்சைக் கலக்கிய விடுதலைவீரர் படில். இதே சமயத்தில் போர்த்துகீசிய ஏகாதிபத்தியத்தின் ஒற்றன் என்று பிடிபட்ட டிசூஸா என்பவனுக்கு முதல் வகுப்பு மரியாதை. சொந்த சகோதரனைக் கொலை செய்து ஆயுள் தண்டனைபெற்ற ஒருவனுக்கும் முதல் வகுப்பு.

கொலைஞனுக்கும் ஒற்றனுக்கும் கௌரவம். தேசாபிமானிகளுக்கு, மக்கள் தலைவர்களுக்கு அவதி!

இரண்டாம் வகுப்பு என்பது பிரிட்டிஷ் காலத்து சி வகுப்புக்கு சமம். நானாபடில், பிரபல மராத்தி எழுத்தாளர் லால்ஜி பெண்ட்ஸே, கோவா விடுதலைப் போர் முன்னணி வீரர் வி. டி. சித்லே இன்னும்பலர் இதில் அல்லல்படுகின்றனர்.

ஆயிரக்கணக்கில் கைது செய்யப்பட்டோரில் சுமார் 6000 பேர் விசாரணையின்றி சிறையிலடைக்கப்பட்டிருக்கிறார்கள்.

இந்த யதேச்சாதிகாரப் போக்கை எதிர்த்து நாடெங்கும் கூட்டங்கள் நடக்கின்றன. 'மொரார்ஜி ராஜினமாச் செய்' என்று கோஷம் எழும்பியுள்ளது. சர்வ கட்சிக் கமிட்டி சத்தியாக்ரகிகள் பட்டியல் தயாரித்துவருகிறது.

சங்கர்ராவ் தேவ், ராவ்சாகிப் பட்டவர்த்தன் போன்ற பிரபல காங்கிரஸ் தலைவர்கள் போலீஸ் அட்டூழியங்களைப்பற்றி பகிரங்க விசாரணை கோரியள்ளனர்.

# விவசாயிகள் சங்க பொதுக்கூட்டங்கள்

**நாகை தாலுகா புலிவலத்தில்:** பஞ்சாயத் போர்ட் தலைவர் தோழர் பாலசுப்பிரமணிய பிள்ளை தலைமையில் நடைபெற்ற விவசாயிகள் சங்கம் பொதுக்கூட்டத்தில் தோழர்கள் கே. பி. நடராஜன், கே. கேசவராஜ் முதலியோர் நியாயவார மசோதா, தமிழகப் பிரச்சினைகள்பற்றிப் பேசினார்கள். சர்வகட்சி ஹர்த்தாலை வரவேற்றுத் தீர்மானம் நிறைவேறியது.

★

**நாகை தாலுகா பெரியதும்பூரில்:** ஜி. பக்தவத்சலம் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கே. பி. நடராஜன், மன்னை இலாரா, கே. கேசவராஜ், பி. சின்னத்தம்பி ஆகியோர் பேசினர்கள். தேசிய விஸ்தரிப்புத் திட்டத்தை நாகை தாலுகாவுக்கு விஸ்தரிக்க கோரியும், வேளாங்கன்னி, வடக்கு பொய்யூர், தெற்கு பொய்யூர் கிராமங்களுக்கு நீர்ப்பாசன வசதி கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

★

**ராமநாதபுரம் கீழப்பூங்குடியில்:** 22-2-56ந் தேதி விவசாயிகள் பொதுக்கூட்டம் நடைபெற்றது. இரா. செங்குட்டுவன் தலைமை வகித்தார். ஜி. வி. ச. காரியதரிசி எம். ஆதிமூலம் செங்கொடியை ஏற்றுவித்தார். சிவகங்கை வி. ச. காரியதரிசி எஸ். எஸ். ராமன் இனம் ஒழிப்புப்பற்றியும் தமிழகம்பற்றியும் பேசினர்.

11ந் தேதி நடைபெற்ற விவசாயசங்க அமைப்புக் கூட்டத்தில் அரு. சாமிநாதன் தலைவராகவும், அரு. சுப்பையா காரியதரிசியாகவும் ஆ. பள்ளிக்கூடத்தான். க. மாயன், அர. வெ. சுப்பையா, மரு. ராக்கப்பன், பெரி வேட்டக்கண்ணு, மா. ராம. தீர்த்தம், மு. சொக்கலிங்கம், ஆ. த. அழகர்சாமி, தொ. கருப்பன். ராபி. வே. காசிராமன், காமாக்ஷி முதலியோர் கமிட்டி உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

★

கோவில்பட்டி தாலுகா கொடியன்குளம் கிராமத்தில் வி. ச. அமைப்புக் கமிட்டி எம். ஏ. செல்லையா தலைமையில் நடைபெற்றது. விவசாயிகள் பிரச்னைகள் பற்றியும் சங்க அவசியம்பற்றியும் ராஜய்யா எஸ். தேவதாஸ், கோடங்கால் கிருஷ்ணசாமி, கே. ஆர். வரதராஜன் முதலியோர் பேசினர்கள்.

62ம் பசலிக்கு வரிவஜா செய்திருந்தும் வரி வசூலிக்கப்பட்டதால் நடப்பு பசலிக்கு அதைவரவு வைத்துக்கொள்ள வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது.

★

வள்ளியூர் வாழை விவசாயிகள் சங்கத்தின் முதலாவது ஆண்டு விழா 16-2-56ந் தேதியன்று திரு கு. கிருஷ்ணபிள்ளை தலைமையில் நடைபெற்றது.

எஸ். கே. வேலாயுதம் ஆண்டறிக்கையை வாசித்தார். சங்கத்தின் சாதனைகளைப் பாராட்டி டி. சின்னசாமி, இரிகேசன் பஞ்சாயத் தலைவர் வி. ஆர். சுப்ரமண்ய அய்யர், நல்லாக்கண்ணு கோனர் சி. சுப்ரமண்யத் தேவர், டி. என். சங்கரைய்பர், கலாமன்றத் தலைவர் டி. எஸ். சுப்ரமண்யத் தேவர், விக்ரமசிங்கபுரம் பஞ்சாயத் தலைவர் ஆர். வி. அனந்த கிருஷ்ணன் முதலியோர் பேசினர்கள்.

வள்ளியூர் குளம் கால்வாய் மராமத்தை பிளாக் டெவலப்மெண்டில் சேர்க்க வேண்டும், வேங்கைநாயக்கன் அணையைக் கட்டவேண்டும், பருவமழை இல்லாததால் வரிவஜா கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

★

**திண்டுக்கல் தாலுகா வெள்ளோடு** கிராம விவசாயிகள் சங்கப் பொதுக்கூட்டம் குப்பண நாயக்கர் தலைமையில் நடைபெற்றது. எம். எல். ஏ. மதனகோபால் கலந்துகொண்டார். குடவனூர் அணைக்கட்டு குடிதண்ணீர் வசதி முதலியவை அவசியம் என்று கோரித் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

திண்டுக்கல் தாலுகா நல்லூர் கிராமப் பொதுமக்கள் 200 பேர் தமது பஞ்சாயத் வார்டு மெம்பர் ஆண்டியப்பனுடன் ஊர்வலமாகத் திரண்டு சென்று குடிதண்ணீர் கோரிக்கையை தலைவர் முன் வைத்தனர். இதன் விளைவாக இருவருக்கு ரூ. 500 காண்ட்ராக்ட் விட்டு முடிவு செய்யப்பட்டுள்ளதாகத் தெரியவருகிறது.

# உழவர் அரங்கிலே.

## தோழர் ப.இ. அப்துல் ரஜாக்

கட்சியின் ராமநாதபுரம் ஜில்லா பரமக்குடி தாலுகா கமிட்டி மெம்பராக இருந்த இளையாங்குடித் தோழர் ப.இ. அப்துல் ரஜாக் அவர்கள், தன் தொழில் நிமித்தமாக, சென்ற வருடம் பர்மாவுக்குச் சென்றார். ரங்கூனில் 1-2-56ல் திடீரென்று தோழர் ரஜாக் மரணமடைந்தார் என்ற செய்தி கேட்டு விவசாயி மக்களும் கம்யூனிஸ்ட் கட்சி ஊழியர்களும் பெரிதும் துக்கமுற்றனர். செங்கொடி தாழ்த்தி வணக்கம் தெரிவித்தனர். பிரிவாற்றாமையால் வருந்தும் அவரது குடும்பத்தினருக்கு எமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவிக்கிறோம்.

வாழ்க அப்துல் ரஜாக் திருநாமம்.

## வழக்கு இல்லை
### கிசான் தலைவர்கள் விடுதலை

மாயூரம் தாலுகா பட்டவர்த்தி விவசாயிகள் கிஸான் சங்கத் தலைவர்கள் உட்பட 50 பேர்கள் மீது போடப்பட்டிருந்த வழக்கில் எதிரிகள் எவர் மீதும் பூர்வாங்கக் குற்றச்சாட்டே எழவில்லை என்று கூறி மாயூரம் ஜுடிஷல் சப் டிவிஷனல் மாஜிஸ்திரேட் 28-2-56ந் தேதி தீர்ப்பளித்தார்.

24-10-55ந் தேதி பட்டவர்த்தி மிராசுதார் வி. முத்தையா பிள்ளைக்குச் சொந்தமான வயலில்

மாயூரம் தாலுகா விவசாயிகள் சங்கக் காரியதரிசி தோழர் எஸ். கோவிந்தராஜன், சீர்காழி தாலுகா வி. ச. செயலாளர் தோழர் கே. எஸ். அண்ணங்கார், ஜி. வி. ச. உதவிக் காரியதரிசி தோழர் கே. ஆர். ஞான சம்பந்தம், ஸ்தல கிசான் ஊழியர்கள்கள் எஸ். ராஜாங்கம், ஜி. பாலுசாமி மற்றும் 45 பேர் பிரவேசித்து களவாக மாசூலை அறுவடை செய்ததாகவும் கேட்க வந்த மிராசுதாரை பயமுறுத்தியதாகவும் இ. பி. கே. 147, 148 447, 382; 506 ஆகிய செக்ஷன்கள் படிவழக்குத் தொடரப்பட்டிருந்தது. தீர்ப்பின் விளைவாகக் கிசான் தலைவர்கள் எல்லோரும் விடுதலை செய்யப்பட்டனர்.

### ஓர் திருத்தம்

முத்துப்பேட்டையில் உள்ள மொத்தக் கடைகள் 250. அதில் காங்கிரஸ்காரர்களின் முயற்சியின் காரணமாக, வேண்டுமென்றே 25 கடைகள் பிப்ரவரி 20 ஹர்த்தாலன்று திறந்து வைக்கப்பட்டிருந்தன. மற்றப்படி ரைஸ் மில்கள், ஹைஸ்கூல்கள் உட்பட பரிபூரண ஹர்த்தால் நடத்தப்பட்டது" என்று கம்யூனிஸ்ட் கட்சியின் திருத்துறைப்பூண்டித் தாலுகா கமிட்டி அங்கத்தினர் தோழர் வி. பழனிவேல் தெரிவிக்கிறார்.

## யு. எஸ். பலூன் மிரட்டல்

மேற்கு ஜெர்மனியிலிருந்தும் துருக்கியிலிருந்தும் அமெரிக்கா பலூன்களை மக்கள் ஜனநாயக நாடுகள்மீதும், சோவியத் யூனியன்மீதும் பறக்கவிட்டது. இதுபோல் ஜப்பானிலிருந்து சீனாமீதும் மங்கோலியாமீதும் பறக்கவிட்டது. அதைப்பற்றி அந்நாடுகள் அமெரிக்காவைக் கண்டித்தபோது, அதெல்லாம் வெறும் சீதோஷ்ண நிலைமைகளை ஆராய்வதற்காக அனுப்பப்பட்ட பலூன்கள் என்று அமெரிக்க அதிகாரிகள் சொன்னார்கள். ஆனால் அப்பலூன்களில் ரேடியோ செட்டுகளும், போட்டோக் கருவிகளும், வெடிபொருள்களும் இருந்தன.

செக்கோஸ்லோவேகியாவில் பறந்துகொண்டிருந்த பலூன் ஒன்றில் செக் விமானம் மோதியதால் 22 பிரயாணிகள் இறந்துபோனார்கள், 4 பேர் படுகாயமுற்றனர். இதை எல்லா நாடுகளும் கண்டித்துள்ளன.

ஐ. நா. சபையில் இதுபற்றி செக்நாடு புகார் கூறியிருக்கிறது.

### பர்மாவுக்கு எதிராக யு. எஸ். ஆயுதங்கள்

பர்மாவில் புகுந்துள்ள சியாங்கே-ஷேக் படைகளுக்கு, அண்டை நாடான தாய்லாந்திலிருந்து அமெரிக்க ஆயுதங்கள் கிடைத்துவருகின்றன. இவற்றை உடனே தடுத்துநிறுத்த வேண்டுமென்று பர்மா சர்க்கார் தாய்லாந்து சர்க்காருக்குக் கடிதமெழுதியுள்ளது.

தாய்லாந்து சீட்டோ நாடுகளில் ஒன்று என்பதை இங்கு ஞாபகப் படுத்திக்கொள்ளவேண்டும்.

### டல்லஸே திரும்பிப் போ!

இந்தோனேஷியாவுக்கு டல்லஸ் வருவதை எதிர்த்து 7 லக்ஷம் இந்தோனேஷிய வாலிபர் சம்மேளனம் கண்டித்து அறிக்கை விட்டிருக்கிறது, கம்யூனிஸ எதிர்ப்பு என்ற பேரால் ஆசிய நாடுகளை அடிமைப்படுத்த சதி செய்ய வருகிற டல்லஸே திரும்பிப்போ என்று பத்திரிகைகள் எழுதியுள்ளன. (சீனச் செய்தி)

## ஊருக்கு உபதேசிக்கும் உத்தமர்கள் நிர்வாகத்தில்
### அச்சக ஊழியர்கள்படும் அவதி

தூத்துக்குடியில் கத்தோலிக்க குருப் பிரசாதிகளால் நடத்தப்பட்டு வரும் அர்ச், சவேரியார் அச்சகத்தில், தொழிலாளர்படும் தொல்லைகள் ஏராளம்! சட்டப்படி எச்சலுகையும் தருவதில்லை. தொழிற் சங்கத்தில் 2 தொழிலாளர்கள் முறையிட்டனர் என்பதற்காக, 8 வருடம், 5 வருடம் சர்வீஸ் உள்ள அவர்களை திடீரென வேலை நீக்கம் செய்தார். அபராதம் போட்டால், ரூ. 1க்கு அரையணா அபராதம் போடவேண்டுமென்று சட்டம் இருந்தால், இவர் 20 ரூபாய் சம்பளக்காரருக்கு 25 ரூபாய் அபராதம் போடுவார். ஓவர் டைம் நேரத்தில் 15 நிமிஷம் தாமதமாக வந்ததற்காக, 3 பேருக்கு ஆளுக்கு 5 ரூபாய் அபராதம் போட்டார். இந்த வருடம் போனஸ் இல்லையாம்! சம்பளம் அலவன்ஸ் எல்லாவற்றையும் சேர்த்தாலும் ரூ. 30 தேறமாட்டேனென்கிறது. சட்டப்படி விடுமுறை கிடையாது. திட்டுவதோ காது சகிக்காது, அப்படித் திட்டுகிறார் அச்சக நிர்வாகி.

மேற்படி விஷயங்களைப் பற்றி தூத்துக்குடி அச்சு அண்டு டைபண்டிங் தொழிலாளர் சங்கம் நோட்டீஸ் போட்டது. குட்டு உடைபட்டவுடனே அந்தச் செய்தியெல்லாம் தவறானது என்று மறுக்கும்படியாக தொழிலாளர்களை மிரட்டி, அச்சக நிர்வாகி கையெழுத்துக்கள் வாங்கி வருவதாகத் தெரிகிறது.

## மணிமுத்தாறில் போலீஸ் அட்டூழியம்!
### 2000 தொழிலாளர்கள் ஸ்ட்ரைக்

மணிமுத்தாறு அணைக்கட்டு வேலையில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்கள் சிலர் 26-2-56 ஞாயிறன்று விடுமுறையாதலால், மேலக்கரையிலுள்ள பள்ளிக்கூட தகரப் பிறையில் தூங்கியிருக்கின்றனர். அப்போது நாலு போலீஸ்காரர்கள் அவர்களை அடித்து, கைகளைப் பின்னால் கட்டி இம்சித்தனர். அங்கே வந்த இதர தொழிலாளர்கள் போலீசின் செயலைக் கண்டித்தனர். இதுபற்றி அறிந்த அணைக்கட்டு நிர்வாக இன்ஜினியர் அவர்கள் மேலதிகாரிகளுக்குப் புகார் செய்திருக்கிறார்.

போலீசின் அக்ரமங்களை எதிர்த்து மணிமுத்தாறு தொழிலாளர்கள் 2000 பேர் வேலை நிறுத்தம் செய்து வருவதாகத் தெரிகிறது.

இப்படிப்பட்ட ஆத்திரமூட்டல்களுக்குக் காரணமானவர்கள் மீது சர்க்கார் கடும் நடவடிக்கை எடுக்கவேண்டுமென தொழிற்சங்கத் தலைவர்கள் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள்.

### விசாரணை செய்!

பிப்ரவரி 20 ஹர்த்தாலின் போது சேலம் ஜில்லா தம்பம்பட்டியிலும், தென் ஆற்காடு ஜில்லா கள்ளக்குறிச்சியிலும் பொதுமக்கள்மீது நடத்திய துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டித்தும், அதைபற்றி பாரபட்சமற்ற பகிரங்க விசாரணை நடத்த வேண்டுமென்றும் ஏராளமான கூட்டங்களில் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன.

## சீனா கேட்கிறது 14 லட்சம் டிராக்டர்கள்
### அமெரிக்க தடைக்கு பிரிட்டன், மேற்கு ஜெர்மனி எதிர்ப்பு

மக்கள் சீனா சோஷலிஸ நிர்மாணத்தில் இறங்கியிருப்பதால், அதற்கு நிறைய இயந்திரங்கள் தேவைப்படுகிறது. "14 லட்சம் உழுபடை இயந்திரங்கள் (டிராக்டர்கள்) வேண்டும். எந்த தேசம் சப்ளை செய்தாலும் எடுத்துக் கொள்ளத் தயார்" என்று உலகிலுள்ள தொழில் வளர்ச்சி பெற்ற நாடுகளைக் கேட்டிருக்கிறது லண்டனிலுள்ள சீன பாங்கி தலைவர் இச்செய்தியை வெளியிட்டதும் பிரிட்டனிலுள்ள பெரிய பெரிய முதலாளிகளுக்கெல்லாம் வாயில் ஜலம் ஊறுகிறது. மேற்கு ஜெர்மன் முதலாளிகளுக்கும் அப்படித்தான்!

சீன பாங்கித் தலைவர் சொல்லிவிட்டார், "எங்களுக்கு வருஷந்தோறும் கெட்டுப்போகும் இயந்திரங்களுக்குப் பதிலாகத் தேவைப்படும் புதிய டிராக்டர்களின் எண்ணிக்கைமட்டும் 120 ஆயிரம். எங்களுக்கு சப்ளை செய்ய எந்த நாடு உடனே முன்வருகிறதோ, அவற்குத்தான் ஆர்டர் கொடுப்போம். எந்த நாட்டுக்காகவும் காத்துக் கொண்டிருக்க மாட்டோம். நாங்கள் வாங்கும் இயந்திரங்களின் மாடலை மாற்ற மாட்டோம். அதனால் ரிப்பேர் செய்யவும், ஸ்பேர் பார்ட்ஸ்களுக்கும் தேவை படுகிறவைகளை, எங்களுக்கு சப்ளை செய்த கம்பெனியிடமே வாங்குவோம்" என்று தெரிவித்தார்.

இதைக் கேள்வியுற்ற பிரிட்டிஷ் மேற்கு ஜெர்மன் முதலாளிகள், "சீனாவுக்கு சாமான்கள் விற்கக் கூடாது" என்று அமெரிக்கா போட்டிருக்கிற தடையைஎப்படியாவது நீக்கிவிடச் செய்ய வேண்டுமென்று முயற்சிக்கிறார்கள்.

### 60 கோடி ஜோடி

இலங்கை வர்த்தக தூது கோஷ்டி சீனாவுக்குச் சென்றிருந்தபோது, அவர்களிடம் சீனப் பிரதமர் சௌ என்-லாய் சொன்னாராம், "எங்கள் நாட்டில் 60 கோடிப் பேர் இருக்கிறோம். ஆளுக்கு ஒரு ஜோடி ரப்பர் செருப்பு வாங்கவேண்டுமென்று முன்வந்தாலே, உலகிலுள்ள பெரும்பாலான ரப்பர் தேவைப்படுமே! அதனால்தான் சொல்லுகிறேன், எங்களுக்கு யுத்தப் பொருள்கள்செய்ய ரப்பர் வேண்டாம். மக்களின் தேவைக்காக வேண்டும்" என்றாராம்.

## தோழர் டாங்கேயை விடுதலை செய்!

மொழிவழி ஆட்சிக்கு விரோதமாக, சர்க்கார் செய்த தீர்ப்பை எதிர்த்து பம்பாய் மக்கள் போராடியபோது, அ. இ. தொழிற்சங்கக் காங்கிரஸ் பொதுச்செயலாளர் தோழர் எஸ். ஏ. டாங்கேயைக் கைது செய்து காவலில் வைத்திருக்கும் அக்ரமத்தை தமிழ்நாட்டுத் தொழிலாளர்கள் வன்மையாகக் கண்டிக்கிறார்கள்.

தோழர் டாங்கேயை உடனே விடுதலை செய்யுமாறு தமிழ்நாட்டு தொழிற்சங்கங்கள் கிளர்ச்சி செய்து வருகின்றன.

மதராஸ் பிரஸ் லேபர் யூனியன் நிர்வாகக்குழு கூட்டம் தலைவர் ஏ. எஸ். கே. அய்யங்கார் தலைமையில் 29-2-56-ல் நடைபெற்றபோது, தோழர் டாங்கேயையும் இதரத் தொழிற்சங்கத் தலைவர்களையும் விடுதலை செய்யவேண்டுமென்றும், சங்கம் சார்பில் "அச்சுத் தொழிலாளி" என்ற மாதப் பத்திரிகை வெளியிடுவதெனவும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

கோவை டீ அண்டு காபி தொழிலாளர் சங்கக்கூட்டம் தலைவர் எம். குப்புசாமிக்கோனார் தலைமையில் 24-2-56-ல் நடைபெற்றபோது, தோழர் டாங்கேயை விடுதலை செய்யுமாறும், போராடும் அம்பத்தூர் சைக்கிள் பாக்டரி தொழிலாளர்களுக்கும், மகாகணபதி மில் தொழிலாளர்களுக்கும் ஆதரவு தெரிவித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# ...20வது காங்கிரஸ் தீர்மானம்

மாக்கப்பட திட்டமிட்டிருந்தது. உற்பத்தி சாதனங்களின் உற்பத்தி 90 சத விதமும், உபயோகப் பண்டங்களின் உற்பத்தி 76 சத விதமும், அதிகமாகியுள்ளது; திட்டத்தின்படி இவ்விரண்டும் முறையே எண்பது, அறுபத்தைந்து சதவீதம்தான் அதிகரிக்கப்பட திட்டமிட்டிருந்தது.

சரித்திரத்தில் மிகக் குறுகிய காலத்திற்குள், சமாதான பூர்வமான பொருளாதாரப் போட்டியில் சோஷலிச பொருளாதார அமைப்பின் அனுகூலங்களின் அடிப்படையில், மிகவும் வளர்ச்சியடைந்த முதலாளித்துவ நாடுகளின் உற்பத்தி விகிதாசாரத்தை எட்டிப்பிடித்து, அதையும் கடந்து செல்லவேண்டும் என்ற சோவியத் யூனியனின் அடிப்படைப் பொருளாதாரப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு, தளராத உறுதியுடன் முயற்சிகள் செய்யப்பட வேண்டுவது அவசியம் என காங்கிரஸ் கருதுகிறது.

கனயந்திரத் தொழில்களுக்கு மிக முக்கியமாக, இரும்பு எஃகு தொழில், இரும்பல்லாத இதர உலோகத் தொழில், நிலக்கரிச் சுரங்கத் தொழில், எண்ணெய்த் தொழில், மின்சார சக்தி உற்பத்தி இஞ்சினீரிங், இரசாயன, கட்டிட உற்பத்திப் பொருள்கள் ஆகியவற்றிற்குக் கொடுக்கப்படும் முதன்மை ஸ்தானம் தொடர்ந்து உறுதி செய்யப்படுவது மிக மிக அவசியமென காங்கிரஸ் கருதுகிறது. அதே சமயத்தில் இது வரை பெற்றுள்ள சமூக உற்பத்தியின் அளவானது உற்பத்தி சாதனங்களை உற்பத்தி செய்வதற்கு மட்டுமின்றி, உபயோகப் பண்டங்களின் உற்பத்தியையும் இன்னும் துரிதமான வேகத்தில் வளர்ப்பதற்கு உதவிசெய்யக் கூடியதாக இருக்கிறது என்றும் காங்கிரஸ் கருதுகிறது.

தொடர்ந்து தொழில் நுணுக்கத்தை முன்னேறச் செய்வதுதான். தொழில் உற்பத்தி முழுவதும் மேலும் வளர்வதற்கான உறுதியான நிபந்தனையாகும். விடாப்பிடியாகவும், திட்டமிட்டும் மிகப் புதிய விஞ்ஞான தொழில் நுணுக்க சாதனைகளையும், மிக முன்னேறியுள்ள நடைமுறைகளையும் தொழிலிலும் போக்குவரத்து சாதனங்களிலும் புகுத்தி, நடைமுறைக்குக் கொண்டுவரவேண்டியது மிக அவசியமாகும்; இன்றிருக்கும் இயந்திரங்கள் நவீனமயமாக்கப்படவேண்டும்; உற்பத்தி ஸ்தாபனமும், உழைப்பு ஸ்தாபனமும் அபிவிருத்திசெய்யப்படவேண்டும்; தொழில் துறையில் விசேஷப் பயிற்சியையும் ஒத்துழைப்பையும் விரிந்த அளவில் வளர்க்கவேண்டும்; இம்முறையில் உழைப்பின் உற்பத்தித் திறனைத் துரிதமான அளவிலே உயர்த்தியாகவேண்டும்; அதுதான், உற்பத்தியை விஸ்தரிப்பதற்கான குறிக்கோள்களை நிறைவேற்றுவதற்கும், மக்களின் வாழ்க்கைத் தரத்தை மேலும் உயர்த்துவதற்கும் தேவையான தீர்மானமான நிபந்தனையாகும்.

நாட்டின் உற்பத்தி சக்திகளை மேலும் வளர்க்க வேண்டுமானால் மூலப் பொருட்கள், கரி, மின்சார சக்தி ஆகியவற்றிற்கான புதிய மூலாதாரங்களைப் பயன்படுத்துவது அவசியமாகும்; எல்லாவற்றிற்கும் மேலாக நாட்டின் கிழக்குப் பிரதேசங்களிலிருக்கும் மிகப் பெரிய இயற்கைச் செல்வாதாரங்களைப் பயன்படுத்துவது அவசியமாகும். நாட்டின் மிகப் பெரிய நிலக்கரிச் சுரங்கத் தொழிலும், மின்சார சக்தி உற்பத்தி ஸ்தலமும், ஒன்றரை முதல் இரண்டு கோடி டன்கள் வரை ஆண்டுதோறும் கனி இரும்பை உற்பத்தி செய்யும் மூன்றுவதான மிகப் பெரிய இரும்பு எஃகுத் தொழிற்சாலையும், புதிய இஞ்சினியரிங் சென்டர்களும் அடுத்த பத்து அல்லது பதினைந்து ஆண்டுகளுக்குள் கிழக்குப் பிராந்தியங்களிலே நிறுவப்பட வேண்டும்.

### கட்சி ஸ்தாபனங்களுக்கு கட்டளை

கட்சியின் எல்லா ஸ்தாபனங்களுக்கும் காங்கிரஸ் கீழ்க் கண்ட கட்டளைகளை யிடுகிறது:

எல்லா தொழிற்சாலைகளும், தொழில்களும் மொத்த உற்பத்தி அளவில் மட்டுமின்றி, பண்டங்கள் முழுவதின் தன்மையாலும், அவற்றின் தரத்திலும் அரசாங்கத் திட்டத்தைப் பூர்த்தி செய்வதை உறுதிப் படுத்துவது.

உற்பத்தித் திறனை நன்கு பயன்படுத்துவது; எல்லாத் தொழிலகங்களும் உற்பத்தியில் எந்த விதமான கோளாறுகளும், இடர்ப்பாடுகளு மில்லாமல் ஒழுங்காகவும், தங்குதடையற்ற முறையிலும் வேலைசெய்து, மாத முழுவதும் தங்களின் உற்பத்திப் பொருட்களை ஒரே சீராக உற்பத்தி செய்யுமாறு செய்வது; இதை நிறைவேற்றுவதற்கு திட்டமிடுவதிலும், தொழிற்சாலைகளுக்கு மூலப் பொருட்கள் விநியோகம் செய்வதிலும் தீவிரமான அபிவிருத்தியை ஏற்படுத்த வேண்டும்.

உற்பத்திப் பண்டங்களின் தரத்தை உயர்த்துவது; உற்பத்திச் செலவுகளைத் திட்டமிட்டுக் குறைப்பது; சிக்கனத்தை கையாள்வது; செலவு கணக்கு வைத்துக் கொள்வது.

வரவிருக்கின்ற ஐந்தாண்டு காலத்திற்குள், தொழில் நுணுக்கக் காரணங்களுக்காக உபயோகிக்கப்படும் உணவுப் பண்டங்களனைத்திற்கும் பதிலாக செயற்கைப் பொருட்களை உபயோகிக்கும் நோக்கத்தோடு, செயற்கை மூலப் பொருட்களையும், மாற்றுப் பொருட்களையும் மேலும் மேலும் அதிகப்படியாகப் பயன்படுத்துவது.

சோவியத் அரசாங்கமானது தேசியப் பொருளாதாரத்தில் தனது மூலதன முதலீட்டைத் தொடர்ந்து பெருக்கி வருகிறது. இந்த முதலீடுகளைச் சிறந்த முறையில் பயன்படுத்துவதற்கு, கட்டிடத் தொழிலை, நவீன தொழில் முறையில் திருத்தி அமைத்தாக வேண்டும். கட்டிட திட்ட முறையை அபிவிருத்தி செய்வதற்கும், கட்டிடங்கள் கட்டும் காலத்தை மிகக் குறைந்த அளவாக குறைப்பதற்கும், முன்னதாகவே தொழிற்சாலைகளில் தயாராகும் இரும்பு கலந்த காங்கிரீட் பாகங்களையும் பகுதிகளையும் மிக விரிந்த அளவில் உபயோகப் படுத்துவதற்கும், பிரதேச வாரியான பெரிய கட்டிடத் தொழில் ஸ்தாபனங்களை உடனடியாக நிறுவுவது உடனடியாக அவசியமாகும்.

## விவசாயத் துறையில் வெற்றிகள்

பரிசீலனைக்குரிய இந்த காலத்தில் சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய கமிட்டி, விவசாயத் துறையில் விரிந்த அளவில் அரசியல் ஸ்தாபன வேலையை நிறைவேற்றியுள்ளது. விவசாயத்தின் பல கிளைகளில் இருந்த பலவீனங்களைப் போக்குவதற்காகவும், விவசாய உற்பத்தியை மிகப் பெரிய அளவிற்கு உயர்த்துவதற்காகவும் மத்திய கமிட்டி பல சிறந்த நடவடிக்கைகளை எடுத்துள்ளது.

அத்தகைய நடவடிக்கைகளுள் குறிப்பிடத்தக்க விசேஷ முக்கியத்வம் வாய்ந்தவை கீழே கொடுக்கப் பட்டுள்ளன:

கூட்டுப்பண்ணை விவசாயிகள் தாங்களே முன்கை எடுத்து எதையும் செய்வதற்கு உரிமை அளிக்கக் கூடிய முறையில், விவசாயத்தில் புதியதோர் திட்டமிடும் முறை புகுத்தப்பட்டது;

விவசாய உற்பத்தியைப் பெருக்குவதற்காக கூட்டுப் பண்ணைகளுக்கும், கூட்டுப் பண்ணை விவசாயிகளுக்கும் அதிகப்படியான பொருளாதார ஊக்கம் அளிக்கும் முறை புகுத்தப்பட்டது;

கூட்டுப்பண்ணைகளுக்கு வேண்டிய நிர்வாக ஊழியர்களையும், நிபுணர்களையும் கொடுத்து கூட்டுப் பண்ணைகளை பலப்படுத்துவதற்காக நாடெங்கிலும் உள்ள நகரங்களிலும் தொழில் நிலையங்களிலுமிருந்து, ஆயிரக்கணக்கான கம்யூனிஸ்டுகளும், கட்சியைச் சேராத ஊழியர்களும் சேகரிக்கப்பட்டனர்.

விவசாயத்திற்கான தொழில் நுணுக்க சாதனங்களை மேலும் அபிவிருத்தி செய்வதற்காகவும், இயந்திர, டிராக்டர் நிலையங்களுக்கு வேண்டிய இயந்திர ஓட்டிகளின் நிரந்தர அமைப்பை நிறுவுவதற்தும், நிர்வாக ஊழியர்கள், இன்ஜினீயரிங் தொழில் நுணுக்க நிபுணர்கள் ஆகியவர்களைக் கொண்டு இயந்திர டிராக்டர் நிலையங்களைப் பலப்படுத்துவது; விவசாயத்திற்காக பட்ஜெட்டில் பெரும் தொகையை ஒதுக்குவது.

விவசாய முன்னேற்றத்திற்கான திட்டத்தைத் தயாரிக்கும் காலத்தில், பொதுவாக விவசாயத்தின் அடிப்படையான தானிய உற்பத்தியைப் பெருக்குவதிலும், குறிப்பாக மிக முக்கியமான கிளையான மிருக வளர்ப்புப் பண்ணையைப் பெருக்குவதிலும் கவனம் செலுத்தவேண்டு மென்ற சரியான முடிவுக்கு மத்தியக் கமிட்டி வந்தது. பண்படுத்தப் படாத நிலங்களைப் பண்படுத்தவும் சோளம் விளையும் நிலத்தின் விஸ்தீரணத்தை அதிகப்படியாக விஸ்தரிக்கவும் வேண்டுமென்று மத்தியக் கமிட்டி எடுத்த முடிவுகளானது மகத்தான முக்கியத்துவம் வாய்ந்தவையாகும்.

நாட்டின் விவசாயத்தை முன்னேறச்செய்யும் வேலையை தங்குதடையின்றித் தொடர்ந்து நடத்துமாறும் மக்களுக்கு ஏராளமான உணவுப்பொருள்களையும், இலேசான தொழிலுக்கு வேண்டிய மூலப்பொருள்களை அளிப்பதற்கு மான பணியில் கட்சியையும், சோவியத் மக்கள் அனைவரையும் ஒன்றுசேர்க்குமாறும், மத்தியக் கமிட்டிக்கு காங்கிரஸ் கட்டளையிடுகிறது.

### விவசாயத்தை இயந்திர மயமாக்கல்

விவசாயத்தை மேலும் இயந்திர மயமாக்குவதை உறுதிப் படுத்தவேண்டியது அவசியமாகும். தனித்தனிப் பகுதிகளை மட்டும் இயந்திரமயமாக்கியதிலிருந்து விவசாய வேலை முழுவதுமே இயந்திரமயமாக்கும் சிக்கலான வேலையைக் குறுகிய காலத்திற்குள் செய்யத் தொடங்கவேண்டும். சோவியத் நாட்டிலும், வெளி நாடுகளிலும் பெற்றுள்ள விஞ்ஞானத் தொழில் நுணுக்கச் சாதனைகளையும் முன்னணியில் நிற்கும் கூட்டுப்பண்ணைகள் இயந்திர டிராக்டர் நிலையங்கள், அரசாங்கப் பண்ணைகள் ஆகியவற்றின் அனுபவங்களையும் புகுத்துவதும், பிரபலப்படுத்துவதும் தீவிரமாக அபிவிருத்தி செய்யப்படவேண்டியது அவசியமாகும்; இந்த அடிப்படையில் விவசாய உற்பத்தியின் ஒவ்வொரு யூனிட்டிற்கும் ஆகும் உழைக்கும் சக்தியையும் பணத்தையும் கடுமையாகக் குறைத்து எல்லா பயிர்களின் பலன்களையும் மிருகப்பண்ணைகளின் உற்பத்தியையும் அதிகப்படுத்தவேண்டும்.

பல கூட்டுப் பண்ணைகளின் பொருளாதாரத்தின் கணிசமான அளவு வளர்ந்திருப்பதால் எப்பொழுதுமே நம்முடைய பிரதான கவலையான உற்பத்தியைப் பொதுவாக விஸ்தரிப்பதுடன் கூட்டுப்பண்ணைகளில் வீடுகள் கட்டுவது, ஓய்வு நிலையங்கள், குழந்தைகளுக்கான விடுதிகள் மற்றும் இதர கலாச்சார பொது நல நிலையங்கள் ஆகியவைகள் கட்டுவது பற்றி தீவிரமான கவனம் செலுத்தவேண்டும்.

இன்னும் அதிகமான மிகச் சிறந்த வழிகாட்டுதல்தான் விவசாயத்துறையில் மேலும் தீவிரமான முன்னேற்றத்தைப் பெறுவதற்கு வேண்டிய தீர்மானமான நிபந்தனையாகும். வரட்டுத்தனமான அதிகாரவர்க்க முறைகளும், தனிநபர் பொறுப்பு இல்லாமல் இருப்பதும் நீக்கப்பட வேண்டும். கட்சியும், அரசாங்க விவசாய ஸ்தாபனங்களும் ஒவ்வொரு பிரதேசத்திலும் உள்ள கூட்டுப் பண்ணைக்குக், அரசாங்கப் பண்ணைக்கும் இயந்திர டிராக்டர் நிலையத்திற்கும், தனித் தனியாக வழிகாட்டவேண்டும்; மக்கள் முன்கை எடுத்து வேலை செய்வதற்கு சகல ஆதரவும் அளிக்கவேண்டும்; தலைமைப் பொறுப்பிலுள்ள நபர்கள் உள்பட எல்லா விவசாயிகளுக்கும், விவசாய உற்பத்தியை அபிவிருத்திசெய்வதற்காக, பௌதிக ஊக்கத்தை அதிகப்படுத்தவேண்டும்.

## சோஷலிஸப் போட்டிக்கு அறைகூவி அழைக்கிறது

தேச வியாபகமான சோஷலிஸ போட்டி இயக்கத்தை மேலும் வளர்த்து, இந்த இயக்கத்திற்கான வழிகளை அபிவிருத்தி செய்து, தொழிலாளிகள், கூட்டு பண்ணை விவசாயிகளின் முன் முயற்சியை இன்னும் உயர்ந்ததோர் மட்டத்திற்கு உயர்த்தி கட்சியும், அரசாங்கமும் ஏற்படுத்தியுள்ள குறிக்கோள்களைப் பூர்த்திசெய்ய முன்வருமாறு, கட்சி, தொழிற்சங்கம், இளம் கம்யூனிஸ்ட் கழகம், பொருளாதார ஸ்தாபனங்கள் ஆகிய சகல ஸ்தாபனங்களையும் காங்கிரஸ் அறைகூவி அழைக்கிறது.

தொழில், விவசாய உற்பத்தி பெருகியிருப்பதானது சோவியத் மக்களின் பொருளாதார நிலையிலும், கலாச்சார மட்டத்திலும் நிலையான உயர்வு ஏற்படுத்துவதற்கு வேண்டிய அடிப்படையை சிருஷ்டித்துள்ளது. ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில், சோவியத் யூனியனில் தேசிய வருமானம் அறுபத்தெட்டு சதவீதம் அதிகரித்துள்ளது. தொழிற்சாலை, அலுவலகத் தொழிலாளர்கள் யதார்த்த சம்பளம் முப்பத்தொன்பது சதவீதம் உயர்ந்துள்ளது; கூட்டுப்பிண்ணை விவசாயிகளின் வருமானம் ஐம்பது சதவீதம் உயர்ந்துள்ளது. தொழிற்சாலைகளிலும், அலுவலகங்களிலும் வேலை செய்யும் தொழிலாளர்களின் எதார்த்த சம்பளத்தையும், கூட்டுப்பண்ணை விவசாயிகளின் வருமானத்தையும் மேலும் உயர்த்தவும், குறைந்த ஊதியம் பெறும் தொழிலாளர்களின் சம்பளத்தை அதிகரிக்கவும், தொழிலாளர்களுக்கு சம்பளம் அளிப்பதற்கு சரியானதோர் வழியைப் புகுத்தவும், தங்களின் வேலையின் பலன்களில் தொழிலாளர்களுக்குள்ள பொருளாதார அக்கறையை வளர்க்கவும் சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியும், மத்திய கமிட்டியும், சோவியத் யூனியன் மந்திரி சபையுப் வகுத்துள்ள திட்டங்களை காங்கிரஸ் பூரணமாக அங்கீகரிக்கிறது. ஆறுவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் எல்லா தொழிற்சாலைகளிலும் ஏழு மணிநேர வேலையை புகுத்தவும், பூமிக்கு கீழே இறங்கி வேலைசெய்யும் நிலக்கரி, தாதுப் பொருள் சுரங்கத் தொழில்களில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கும், பதினெட்டு வயதுக் குட்பட்ட தொழிலாளர்களுக்கும், ஆறுமணிநேர வேலையைப் புகுத்தவும், மத்திய கமிட்டி எடுத்துள்ள முடிவானது மிகப்பெரிய அரசியல், பொருளாதார முக்கியத்வம் வாய்ந்ததாகும். அத்துடன் எங்கெல்லாம் உற்பத்தி நிலைகள் நாளைக்கு எட்டுமணி நேர விகிதம் வாரத்தில் ஐந்து நாட்கள் வேலை செய்து இரண்டு நாட்கள் விடுமுறை அளிக்க முடியுமோ, அங்கெல்லாம் அந்த முறையைப் புகுத்துவதற்கும் இந்த முடிவு தீர்மானித்துள்ளது. சனிக்கிழமைகளிலும், விடுமுறைக்கு முந்திய தினங்களிலும் ஆறு மணி நேர வேலை வெகு சீக்கிரம் புகுத்தப்படும்.

(அடுத்த பக்கம் பார்க்க)

(மத்திய பக்கத் தொடர்ச்சி)

தப்பிலித்தனம் செய்தவர்கள் சம்பந்தமாக மீண்டும் நடவடிக்கைகள் தொடங்கலாம்; வருமான வரி இலாகாவுக்கு சோதனை செய்யவும் கணக்குகள் தஸ்தாவேஜுகளைப் பறிமுதல் செய்யவும் அதிகாரமளிப்பது இவை வரவேற்கத்தக்க முடிவுகள்.

### தப்பிவிட்டனர்

ஆனல் பெரு முதலாளிகளைப் பொறுத்தவரையில் தொல்லைவிட்டது என்ற நிலைதான். எதிர்பார்த்ததைவிட மிகக் குறைந்த பளுவுடன் தப்பித்து விட்டதாகத் திருப்திப்பட்டுக் கொண்டனர். "வாழ்க்கைச் செலவு நிச்சயமாக அதிகரிக்கும்" என்று துளசிசந்த் கிலாசந்த் கூறியது குறிப்பிடத் தக்கது.

அடுத்த ஆண்டில் மக்கள் மீது இன்னும் பெரிய வரிப் பளுக்கள் சுமத்தப்படப்போகின்றன என்பது தெட்டத்தெளிவு. ஏனெனில் தேர்தல்கள் முடிந்துவிடும். ஆளும் கட்சிக்கு அந்தத் தொல்லை தீர்ந்துவிடும். இதை நிதி மந்திரியின் பேச்சு சூசமாகக் குறிப்பிட்டது.

எனவே, வரப்போகும் ஆண்டில் ஜனநாயக இயக்கத்திற்கு மகத்தான பொறுப்புகள் இருக்கின்றன. அபிவிருத்தி வேலைக்கான நிதி திரட்டுவதில்—எங்கு கவனம் செலுத்த வேண்டுமோ அங்கு பணக்காரர்மீது பளுவைச் சுமத்தவேண்டும் மக்கள் மீது சுமத்தக்கூடாது என்று சர்க்காரை நிர்ப்பந்திக்கும் வெகுஜனக் கிளர்ச்சியைத் தீவிரமாக நடத்தவேண்டும்.

## இணைப்புக்கு எதிராக மக்கள் வாக்கு

### கல்கத்தா தேர்தல்களில் காங்கிரஸ் தோல்வி

மொழிவழி ராஜ்ய அமைப்பை மறுத்து மக்கள் விருப்பத்திற்கு எதிராக வங்காள-பீஹார் இணைப்பை காங்கிரஸ் சர்க்கார் திணித்து வருகிறதல்லவா! வினை விதைத்தவன் வினை பறுப்பான் என்பதுபோல இதன் விளைவை காங்கிரஸ் அனுபவித்து வர நேருகிறது.

கடந்த ஒரு மாத காலத்தில் வங்காளத்தில் நடைபெற்ற நகரசபைத் தேர்தல்களில் காங்கிரசிற்குத் தோல்விமேல் தோல்வி. விபரங்கள் வருமாறு:

காஞ்சிர்பரா நகரசபை ஒன்பது ஸ்தானங்களில் எட்டுக்கு காங்கிரஸ் போட்டியிட்டு ஆறிடங்களில் தோல்வியுற்றது. இந்த ஆறு ஸ்தானங்களையும் கம்யூனிஸ்டுகளும் சுயேச்சை அபேட்சகர்களும் பெற்றனர். காங்கிரஸ் சேர்மன் உதவி சேர்மன்கள் மண் கவ்வினர்.

தாம்லுக் நகரசபையில் கம்யூனிஸ்ட் தலைவர் விச்வநாத் முகர்ஜி, கீதா முகர்ஜி, உமாசங்கர்தாஸ் உட்பட 12ல் 9 ஸ்தானங்களில் முற்போக்கு அபேட்சகர்கள் வெற்றிபெற்றார்கள்.

பாலி பஜார் நகர சபையில் 17 ஸ்தானங்களில் காங்கிரசிற்குக் கிடைத்தது ஐந்தே. மீதி 12ம் கம்யூனிஸ்ட் ஆதரவுள்ள நகர மக்கள் முன்னணிக்குக் கிடைத்தன.

தெற்கு டம் டம் நகரசபையில் ஒன்பது ஸ்தானங்களில் தட்டுத் தடுமாறி ஒரு ஸ்தானம்தான் காங்கிரஸ் பெற முடிந்தது. எட்டும் கம்யூனிஸ்ட் இடதுசாரி கட்சிகளுக்கு உரித்தாயின.

கோபர் தங்காவில் முற்போக்கு கூட்டணி ஒன்பதில் ஐந்து ஸ்தானங்களை வென்றது.

இவற்றின் விளைவாக சர்க்கார் கல்கத்தா நகரசபைத் தேர்தலை ஒத்திவைத்துவிட்டது. முன்னல் 1956 மார்ச் 29ந் தேதி தேர்தல் நடக்கவேண்டும் என்று அறிக்கைவிட்ட சர்க்கார் காற்று எத்திசையில் அடிக்கிறது என்பதைக் கண்டது. தேர்தல் ஒத்திவைப்பு ஹேஷ்யங்கள் பறந்தன. சட்டசபையில் கேள்வி எழுந்தது. திட்டவட்டமான பதில் இல்லை.

இறுதியாக பிப்ரவரி 23ந் தேதி நகரசபையின் ஆயுளை இன்னும் ஓராண்டுக்கு நீட்டியுள்ளதாக அறிக்கை வெளியிடப் பட்டது.

# . . . 20வது காங்கிரஸ் தீர்மானம்

(முன் பக்கத் தொடர்ச்சி)

கிடையேயும் அத்தகைய உறவுகளை ஏற்படுத்துவதும் உலக சமாதானத்தைப் பாதுகாப்பதற்கு மிக முக்கியமானதாகும்.

இந்த நோக்கத்தோடு சோவியத் தரப்பிலிருந்து எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் தக்ககாலத்தில் எடுக்கப்பட்டவை யென்றும், சரியானவை யென்றும் கட்சியின் இருபதாவது காங்கிரஸ் கருதுகிறது; அவற்றைப் பூரணமாக ஆமோதிக்கிறது.

### வெளிநாடுகளுடன் உறவு

சோவியத் யூனியனுக்கும், மேற்கு ஐரோப்பிய நாடுகளுக்குமிடையே உள்ள உறவுகள் மேலும் அபிவிருத்தி செய்யப்படவேண்டுமென, ஐரோப்பிய மக்களின் பந்தோபஸ்திற்கும், நிரந்தர சமாதானத்திற்குமான நலன்கள் அறைகூவி அழைக்கின்றன. பிரிட்டன், பிரான்ஸ், இத்தாலி, போலந்து, செக்கோஸ்லவேகியா, யுகோஸ்லாவியா, ஸ்வீடன், பின்லந்து, நார்வே, கிரீஸ், ஆஸ்திரியா, மற்றுமிருக்கக் கூடிய ஐரோப்பிய நாடுகள் ஆகியவைகளோடு சோவியத் யூனியனும் நடைபெற்ற இரு உலக யுத்தங்களின் போர்க்களமான ஐரோப்பிய பிரதேசத்தில் புதியதோர் யுத்தம் ஏற்படாமல் தடுக்கப்பட வேண்டுமென்பதில் ஜீவிதமான அக்கரை கொண்டுள்ளது. ஜெர்மன் மக்களும் இதைப் போலவே அக்கரை கொண்டுள்ளனர். இவ்விதமாக ஐரோப்பாவிலுள்ள சகல நாடுகளும், மக்களும், புதியதோர் இராணுவ மோதுதல்கள் ஏற்படாமல் தடுப்பதற்கான பொதுவான போராட்ட நலன்களால் ஒன்றுபடுத்தப்பட்டுள்ளனர்.

சோவியத் யூனியனுக்கும், கிழக்கு நாடுகளுக்குமிடையே நட்புறவையும், ஒத்துழைப்பையும் விஸ்தரித்துக் கெட்டிப்படுத்துவது, இன்றைய சர்வதேச நிலைமையில் சிறப்பு மிக்க ஓர் பங்கை வகிக்க வேண்டும். இந்தக் கடமை நிறைவேற்றப் படுவதற்கு மகத்தான முக்கியத்துவத்தை இருபதாவது காங்கிரஸ் அளிப்பதனால், இந்தியக் குடியரசு, பர்மா, ஆப்கனிஸ்தானம், எகிப்து ஆகிய நாடுகளுடன் நேச பூர்வமான நல்லுறவுகள் சமீப காலத்தில் ஏற்படுத்தப் பட்டிருப்பதை அங்கீகரிக்கிறது.

தங்களின் தேசிய சுதந்திரத்தைப் பாதுகாத்துப் பலப்படுத்த அரேபிய மக்கள் செய்துவரும் முயற்சிகள் வளர்வதானது, சமாதான, ஜனநாயக நோக்கங்களுக்கு உகந்ததொன்றாகும்.

சோவியத் யூனியன் அநேகமாகத் தன்னுடைய எல்லா அண்டை நாடுகளுடனும் நேச பூர்வமான நல்லுறவை ஏற்படுத்தியுள்ளதை இருபதாவது காங்கிரஸ் திருப்தியுடன் குறிப்பிடுகிறது. சோவியத் யூனியனுக்கும், இரான், துருக்கி, பாகிஸ்தான் ஆகிய நாடுகளுக்குமிடையே சகஜமான உறவுகளிருப்பது, இந் நாடுகளின் ஜீவாதார நலன்களுக்கும், சமாதானம், மக்களின் பாதுகாப்பு ஆகியவற்றின் நலன்களுக்கும் உகந்ததாகும் என்பதில் சந்தேகமே யில்லை.

சர்வதேச வாணிபமும், கலாச்சார உறவுகளை விஸ்தரிப்பதும், நாடுகளுக்கிடையேயுள்ள ஒத்துழைப்பின் அடிப்படையை விஸ்தரிப்பதில் ஒரு பெரும் பங்கை வகிக்கவேண்டும்.

### சமாதான சகஜீவனம்

இரு அமைப்புகளுக்கிடையே சமாதான பூர்வமான சகவாழ்வை ஏற்படுத்துவது, இன்றைய காலகட்டத்தில் யுத்தத்தைத் தடுக்கும் வாய்ப்பு, பல்வேறு நாடுகள் சோஷலிசத்தை ஏற்படுத்தும் ரூபங்கள் ஆகியவை போன்ற இன்றைய சர்வதேச வளர்ச்சி சம்பந்தப்பட்ட அடிப்படைப் பிரச்னைகள், சமீப காலத்தில் குறிப்பிடத்தக்க விசேஷ முக்கியத்துவம் வாய்ந்தவையாகி யுள்ளன, என இருபதாவது காங்கிரஸ் குறிப்பிடுகிறது.

மாறுபட்ட சமூக அமைப்புகளையுடைய நாடுகள் சமாதான பூர்வமான சகவாழ்வு வாழ்வது என்னும் லெனினிசக் கோட்பாடுதான் சோவியத் யூனியன் வெளிநாட்டுக் கொள்கையின் பொது அம்சமாக இன்றும், என்றும் இருந்துவருகிறது.

நம் நாட்டில் கம்யூனிச சமுதாயத்தைக் கட்டி வளர்க்கும் பணிக்கு வழிகாட்டி நடக்கும் நமது கட்சி யுத்தத்தைத் தீவிரமாக எதிர்க்கிறது. எந்த ஒரு நாட்டிலும் புதியதோர் சமுதாயத்தை அமைப்பது அந்த நாட்டு மக்களைப் பொறுத்த விஷயம் என்ற லெனினின் அழிக்கமுடியாத கட்டளையிலிருந்து அந்தக் கொள்கை தோன்றியுள்ளது. சமாதான பூர்வமான சகவாழ்வு என்னும் கோட்பாடு மேலும் மேலும் அங்கீகாரம் பெற்று வருவதை காங்கிரஸ் திருப்தியுடன் குறிப்பிடுகிறது.

### சகோதர உறவுகள்

வெளிநாட்டுக் கொள்கையில் கீழ்க்கண்ட கடமைகளை சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் கமிட்டிமுன் காங்கிரஸ் வைக்கிறது. எத்தகைய சமூக அமைப்புகளிருப்பினும் பல்வேறு இராஜ்யங்களுக்கிடையே சமாதானபூர்வமான சகவாழ்வு வேண்டுமெனும் லெனினிஸக் கொள்கையை வழுவாமல் கடைப்பிடிப்பது. சமாதானத்திற்காகவும், மக்களின் பந்தோபஸ்திற்காகவும் உழைப்பது; இதுவரை நெருக்கடியால் ஏற்பட்டுள்ள தளர்ச்சியை, நிரந்தர சமாதானமாக மாற்றும் குறிக்கோளோடு இராஜ்யங்களுக்கிடையே நம்பிக்கையை ஏற்படுத்த உழைப்பது.

எவ்வளவுக்கெவ்வளவு சோஷலிஸ்ட் நாடுகளின் பலமும் ஒற்றுமையும் அதிகரிக்கப்படுகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு சமாதானம் பலப்படும் என்பதை ஞாபகத்தில் கொண்டு சகல வழிகளிலும், மக்கள் சீனக் குடியரசு, எல்லா மக்கள் ஜனநாயகங்கள் ஆகியவற்றுடன் உள்ள சகோதரபூர்வமான உறவுகளைப் பலப்படுத்துவது.

யுகோஸ்லாவியா மக்கள் குடியரசின் சகோதர மக்களுடன் நட்புறவையும், ஒத்துழைப்பையும் பலப்படுத்துவது.

சமாதானத்திற்காக நிற்கும் இந்தியக் குடியரசு, பர்மா யூனியன், ஆப்கானிஸ்தானம், எகிப்து, சிரியா, இந்தோனேஷியா ஆகிய நாடுகளுடன் உள்ள நட்புறவுகளையும், ஒத்துழைப்பையும் கெட்டிப்படுத்துவது; இராணுவ அணிகளிலே சேரமறுக்கும் நாடுகளுக்கு ஆதரவளிப்பது; சமாதானத்தைப் பாதுகாக்க முன்வரும் சகல சக்திகளுடனும் ஒத்துழைப்பது.

நடுநிலைமை நாடுகளான பின்லந்து, ஆஸ்திரியா, ஸ்வீடன் ஆகிய நாடுகளுடன் நேச உறவுகளை வளர்த்துப் பலப்படுத்துவது.

பரஸ்பர நம்பிக்கையை ஏற்படுத்தவும், பொருளாதார உறவுகளை விஸ்தரிக்கவும், தொடர்புகளை விரிவுபடுத்தவும், விஞ்ஞான, கலாசாரத் துறைகளில்ஒத்துழைப்பை ஏற்படுத்தவும், அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ், இத்தாலி, மேற்கு ஜெர்மனி, ஜப்பான் ஆகிய நாடுகளுடனும், நமது அண்டை நாடுகளான இரான், துருக்கி, பாகிஸ்தான் ஆகிய நாடுகளுடனும் உள்ள உறவுகளை மேலும் அபிவிருத்தி செய்யும் கொள்கையைத் தீவிரமாகப் பின்பற்றுவது.

எல்லா நாடுகளின் உழைப்பாளி மக்களுடனும் சகோதரபூர்வமான தொடர்புகளை வளர்த்துப் பலப்படுத்துவது.

சர்வதேச நெருக்கடி தளர்வதை விரும்பாத வட்டாரங்களின் சதிகளை விழிப்புடன் உஷாராகக் கவனித்து வருவது; சமாதானத்தின் எதிரிகளுடைய நாசவேலைகளை தக்கதருணத்தில் அம்பலப்படுத்துவது; நமது சோஷலிஸ்ட் ராஜ்யத்தின் பாதுகாப்பு வலிமையை மேலும் பலப்படுத்த தேவையான நடவடிக்கைகளை எடுப்பது; நம்முடைய பாதுகாப்பு சக்திகளை இன்றைய தளவாடங்களும், விஞ்ஞானமும் கோருமளவிற்கு வைத்துக்கொண்டு, நாட்டின் பந்தோபஸ்தை உறுதிப்படுத்துவது.

## சோஷலிஸத்தை நோக்கி

சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியானது லெனினின் கீழ்க்கண்ட கருத்துரையைத்தான் அடிப்படையாகக் கொண்டுள்ளது: "எல்லா தேசங்களும் சோஷலிஸத்தை அடைந்தே தீரும்—இது தவிர்க்க முடியாதது; ஆனால் எல்லாம் ஒரு குறிப்பிட்ட வழியிலேயே அதைச் செய்யாது; ஒவ்வொன்றும் தனக்கே உரித்தான ஒவ்வொரு வகை ஜனநாயக ரூபத்தை அதற்குக் கொடுக்கும்; நானாவிதமான தொழிலாளி வர்க்க சர்வாதிகாரத்தைக் கொண்டிருக்கும்; சமூக வாழ்வின் பல்வேறு அம்சங்களில் சோஷலிஸ மாற்றங்கள் வெவ்வேறு தரத்தில் கொண்டு வரப்படும்," (லெனின் தொகுப்பு வால்யூம் 23; பக்கம் 58).

சோஷலிஸத்தை நோக்கி முன்னேறும் நாடுகள் அனைத்திலும் ஏற்பட்டுள்ள வளர்ச்சியில் சரித்திரபூர்வமான அனுபவம் லெனினின் இந்தக் கருத்துரையைப் பூரணமாக நிரூபித்துள்ளது. சமுதாயத்தை சோஷலிஸ்ட் அடிப்படையில் புனர்நிர்மாணம் செய்வதற்கு சோவியத் ரூபத்துடன், இப்பொழுது மக்கள் ஜனநாயக ரூபமும் ஏற்பட்டுள்ளது. சென்ற பத்து ஆண்டுகளில் நன்கு சோதனை செய்யப்பட்டு அதனுடைய சரியான தன்மை நிரூபிக்கப்பட்டுள்ளது. மக்கள் ஜனநாயகங்களிலேயே, அந்த நாடுகளின் நிலைமைகளுக்கேற்ப, பல்விதமான வேறுபாடுகளும், விசேஷத்தன்மைகளும் இருக்கின்றன. சீனமக்கள் குடியரசின் சோஷலிஸ நிர்மாணத்தின் போக்கில் பல தனித்தன்மைகளைக் காணலாம்; புரட்சி வெற்றியடையுமுன் அந்த நாட்டின் பொருளாதாரம் மிகமிகப் பின்தங்கிய, அரை நிலப்பிரபுத்துவ, அரைக்காலனித் தன்மையைக் கொண்டிருந்தது. மக்கள் ஜனநாயக அரசாங்கமானது, மிக முக்கியமான தலைமைப் பொறுப்புகளைத் தன் கையில் எடுத்துக்கொண்ட பின், அவற்றின் உதவிகொண்டு, தனிநபர் துறையில் தொழிலையும் வர்த்தகத்தையும் சமாதானமான முறையில் திருத்தியமைத்து, அதைச் சோஷலிஸப் பொருளாதாரத்தின் ஒரு அங்கமாக்கும் கொள்கையை அமுலுக்குக் கொண்டுவந்து கொண்டிருக்கிறது.

சோஷலிஸ மாற்றங்களின் ரூபங்கள் மேலும் மேலும் மாறுபாடுகளைக்கொண்டேயிருக்குமென்பது தர்க்கரீதியானதாகும். அத்துடன் இந்த ரூபங்களை நடைமுறைக்குக் கொண்டுவரும் காலத்தில், எல்லா சந்தர்ப்பங்களிலும் உள்நாட்டு யுத்தம் இருக்கவேண்டுமென்பது தேவையில்லை. ஆளும் வர்க்கங்கள் தங்கள் அதிகாரத்தைத் தாங்களாகவே விட்டுக்கொடுப்பதில்லை என லெனினிஸம் நமக்குப் போதிக்கிறது. எனினும், வர்க்கப் போராட்டத்தின் கடுமையானது அதிகரிப்பதும், குறைவதும், சோஷலிஸ மாற்றம் ஏற்படும்பொழுது பலாத்காரம் உபயோகப்படுவதும், உபயோகிக்கப்படாததும் தொழிலாளி வர்க்கத்தை அவ்வளவு அதிகமாகப் பொறுத்திருக்கவில்லை; பெரும்பான்மை உழைப்பாளி மக்களின் விருப்பத்தை சுரண்டல் கூட்டம் எதிர்ப்பதையும், சுரண்டும் வர்க்கமே பலாத்காரத்தை அனுஷ்டிப்பதையும் பொறுத்திருக்கிறது அது.

முதலாளித்துவம் இன்னும் பலமாக இருந்துகொண்டு, மிகப் பெரிய இராணுவத்தையும், போலீசையும் தன் கையிலேயே வைத்துக்கொண்டிருக்கக்கூடிய, பல முதலாளித்துவ நாடுகளில் வர்க்கப் போராட்டம் தீவிரமான கூர்மையடைவது தவிர்க்கமுடியாதது என்பதில் சந்தேகமேயில்லை.

## நிரந்தர சமாதானத்திற்காக

ஒரு நிரந்தரமான சமாதானத்தைப் பாதுகாத்து கெட்டிப்படுத்துவதும், புதியதோர் யுத்தத்தை புதிய ஆக்கிரமிப்பைத் தடுப்பதும் சோவியத் யூனியன் சோஷலிஸ்ட் நாடுகள் சமாதானத்தை விரும்பும் இதர நாடுகள் எல்லா நாடுகளிலுமுள்ள விரிந்து பரந்த மக்கள், ஆகியோர் முன்னுள்ள பிரதான கடமையாகும். மக்களுக்குச் சொல்லமுடியாத துன்பங்களையும் அழிவையும் கொண்டு வரக்கூடிய, நவீன இராணுவ ஆயுதங்களுடன் நடத்தப்படும் புதிய யுத்தத்தில், ஏகாதிபத்திய ஆக்கிரமிப்பு சக்திகள் மக்களை சிக்கவைப்பதைத் தடுப்பது இன்றைய சர்வதேச நிலையில் சாத்தியமானதாகும். இன்று உலகில், முதலாளித்துவ அமைப்பு மட்டுமின்றி, பலம் பொருந்திய சமாதானத்தை விரும்பும் சோஷலிஸ முகாமும் உள்ளது; இந்த முகாம் சமாதான சக்திகளுக்கு தார்மீக ஆதரவுமட்டுமின்றி, ஆக்கிரமிப்பிற்கெதிரான பௌதீகத் தடைகளையும் அளிக்கிறது. மேலும் கோடிக்கணக்கான மக்களைக் கொண்டுள்ள, யுத்தத்தைத் தீவிரமாக எதிர்க்கக்கூடிய நாடுகளைக் கொண்ட விரிந்த ஓர் குழுவும் இன்று இருக்கிறது. அத்துடன் பலம் வாய்ந்த உலக வியாபகமான சமாதான இயக்கமும் இருக்கிறது. முதலாளித்துவ நாடுகளில் தொழிலாளர் இயக்கம் ஒரு பலம் பொருந்திய சக்தியாக ஆகியுள்ளது.

இந்நிலைமைகளிலும் ஏகாதிபத்தியம் இருக்கும் வரை, யுத்தத்திற்கான பொருளாதார அடிப்படை இருக்கிறது என்ற லெனினின் ஆய்வுரையானது நிச்சயமாக சரியானதே. அதனால்தான் நாம் அயராது கண்விழிப்புடனிருக்கவேண்டும். உலகில் முதலாளித்துவம் இருக்கும்பொழுது ஏகபோக முதலாளிகளின் நலன்களைப் பிரதிபலிக்கும் பிற்போக்குச் சக்திகள் இராணுவச் சூதாட்டங்களிலும் ஆக்கிரமிப்புகளிலுமிறங்க முயற்சித்துக்கொண்டுதான் இருப்பார்கள்; புதிய யுத்தத்தை ஆரம்பிக்க எத்தனிப்பார்கள். ஆனால் யுத்தம் என்பது தவிர்க்கமுடியாத விதியல்ல. ஏகாதிபத்திய வாதிகள் யுத்தத்தைக் கட்டவிழ்த்து விடாமல் தடுக்கக்கூடிய கடுமையான சாதனங்களையுடைய சக்திவாய்ந்த சமூக, அரசியல் சக்திகள் இன்றுள்ளன. அப்படி அவர்கள் யுத்தத்தை ஆரம்பித்தால் அவர்களுக்குச் சரியான அடி கொடுத்து, அவர்களின் திட்டங்களைத் தகர்த்தெறியவும் இந்தச் சக்திகளால் முடியும். இந்த நோக்கத்தோடு யுத்தத்தை எதிர்க்கும் சக்திகள் அனைத்தும் கண்விழிப்புடனிருக்க வேண்டும்; ஒருங்கே திரட்டப்படவேண்டும்; ஓரணியிலே ஒன்றுசேர்ந்து உழைக்கவேண்டும்; சமாதானத்தைப் பாதுகாத்துக் கெட்டிப்படுத்தும் போராட்டத்தை எப்பொழுதும் தளர்த்தக்கூடாது. உலக அரங்கில் சோஷலிஸத்திற்காதரவாக ஏற்படும் சரித்திரபூர்வமான தீவிர மாறுதல்களைப் பொறுத்தவரை, நாடுகள் முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்திற்கு மாறுவதற்கு புதிய வாய்ப்புகள் ஏற்பட்டு வருகின்றன.

## சோஷலிஸத்திற்கு சாதகம்

அதேசமயத்தில், உலகில் சோஷலிஸத்திற்குச் சாதகமான அடிப்படை மாற்றங்கள் ஏற்பட்டிருப்பதன் விளைவாகவும், தொழிலாளிகள், விவசாயிகள், அறிவாளிகள் ஆகிய பகுதிகளை மேலும் மேலும் ஆகர்ஷிக்கும் ஒரு பலம் பொருந்திய சக்தியை சோஷலிஸம் கொண்டிருப்பதனாலும், சோஷலிஸம் வெற்றியடைவதற்குச் சாதகமான நிலைமைகள் சிருஷ்டிக்கப்பட்டுவருகின்றன. அதே சமயத்தில், பல முதலாளித்துவ நாடுகளில், தன்னுடைய முன்னணிப்படையினால் தலைமை தாங்கப்பட்டுள்ள தொழிலாளிவர்க்கம், தன் தலைமையின்கீழ் பெரும்பாலான மக்களை ஒன்றுபடுத்தி, அடிப்படை உற்பத்தி சாதனங்களை மக்கள் கையில் சேருமாறு செய்வதற்கான உண்மையான வாய்ப்பை இன்றைய நிலைமை அளிக்கிறது. வலதுசாரி பூர்ஷ்வாக் கட்சிகளும் அவை நிறுவும் அரசாங்கங்களும் அடிக்கடி திவாலாவது மேலும் மேலும் அதிகரித்துக்கொண்டு வருகிறது. இந்நிலைமைகளில், தொழிலாளிவர்க்கமானது, பாடுபடும் விவசாயி வர்க்கத்தையும், பெருவாரியான அறிவாளிகளையும், தேசபக்த சக்திகளையும் தன்னணியில் சேர்த்துக்கொண்டு, முதலாளிகளுடனும், நிலப்பிரபுக்களுடனும் சமரஸம் செய்வதைக் கைவிடாத சந்தர்ப்பவாத நபர்களைக் கடுமையாகச் சாடுவதன்மூலம், வெகுஜன நலன்களுக்கெதிரான பிற்போக்கு சக்திகளை முறியடிக்கமுடியும்; பார்லிமெண்டில் ஸ்திரமான மெஜாரிட்டியைப் பெறமுடியும்; அதன்மூலம் பூர்ஷ்வா ஜனநாயகக் கருவியாக இருக்கும் பார்லிமெண்டை, மக்களின் கருத்தைப் பிரதிபலிக்கும் உண்மையான கருவியாக மாற்றமுடியும்.

மற்ற நாடுகளில் சோஷலிஸம் வெற்றியடைவதற்குச் சாதகமான சூழ்நிலைமைகள் உருவாக்கப்பட்டிருப்பதற்குக் காரணம், சோவியத் யூனியனில் சோஷலிஸம் வெற்றியடைந்திருப்பதும், மக்கள் ஜனநாயகங்களில் அது வெற்றியடைந்துகொண்டு வருவதும்தான் எனக் காங்கிரஸ் வலியுறுத்துகிறது. புரட்சிகரமான மார்க்ஸிஸ-லெனினிஸத்தின் வெற்றியும், சந்தர்ப்பவாத, சீர்திருத்தவாதத் தத்துவத்தை எதிர்த்து உறுதியாகவும், சளைக்காமலும் போராடியதும்தான், இந்த வெற்றிக்குவேண்டிய இன்றியமையாத நிலைப்பாக இருந்துவருகிறது.

## II

## ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டம் பூர்த்தி

சோவியத் யூனியனின் உள்நாட்டு நிலைமை மேலும் பலப்படுத்தப்பட்டிருப்பதை, சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் இருபதாவது காங்கிரஸ் ஆழ்ந்த திருப்தியுடன் குறிப்பிடுகிறது. சோவியத் கம்யூனிஸ்ட்சியின் மத்தியக்கமிட்டி, கட்சியின் பொதுவான கொள்கையை வழுவாமல் அமுல் நடத்திய தன் விளைவாக, சமூக உற்பத்தியின் சகல கிளைகளிலும் பரிசீலனைக்குரிய இந்தக் காலத்தில் கணிசமான வளர்ச்சி ஏற்பட்டுள்ளது; மக்களின் பௌதிக, கலாச்சார நிலைகள் உயர்ந்துள்ளன; சோவியத் சமூகத்தின் தார்மீக, அரசியல் ஒற்றுமை மேலும் பலமடைந்துள்ளது; சோவியத் ராஜ்யத்தின் பலம் பெருகியுள்ளது.

ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டம் குறிப்பிட்ட காலத்திற்கு முன்பே பூர்த்தி செய்யப்பட்டதும், சோவியத் தொழில்களில் குறிக்கோள்களுக்கதிகமாகவே உற்பத்தி செய்யப்பட்டதும், கட்சிக்கும், மக்களுக்கும் மிகப்பெரிய வெற்றியாகும்.

1955ல் தொழில் உற்பத்தியானது 1950விட எண்பத்தைந்து சதவீதம் அதிகமாகியுள்ளது; ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எழுபது சதவீதம்தான் அதிக

(9-ம் பக்கம் பார்க்க)

# நெய்வேலியில் ஒரு நாள்! (2)

## தமிழகத்தின் தொழில் வளத்துக்கு ஓர் ஜீவஊற்று

நெய்வேலியில் பழுப்பு நிலக்கரிக்கு அடியில் உள்ள தண்ணீரை, வெளியே இறைப்பதற்கான பம்பிங் சோதனைகள் 29-2-56ல் ஆரம்பிக்கப்பட்டது. கனிகளை வெட்டியெடுத்து உபயோகிப்பதற்கான வேலைத் திட்டத்தை இறுதியாக வகுப்பதற்கு முந்திய பூர்வாங்கப் பரிசீலனையின் கடைசிக் கட்டம் இது. இதை பத்திரிகை நிருபர்கள் பார்வையிட இந்திய சர்க்காரின் பிரச்சார இலாகா ஏற்பாடு செய்தது.

ஆசிரியர்.

### குறவன் குப்பம்

நீர் இறைப்பு ஆரம்ப வேலையைப் பார்வையிட்ட பிறகு, சற்று தூரத்தில் கூட்டம் கூட்டமாக விவசாயிகளும் அவர்களது பெண்டு பிள்ளைகளும் நின்றூர்கள். அவர்களெல்லாம் யார் என்றும், குழாய்கள் அமைக்கப்பட்டிருக்கும் நிலம் எந்தக் கிராமத்தைச் சேர்ந்ததென்றும் ஒரு தொழிலாளியிடம் நான் கேட்டேன். அவர் சொன்னர், "குழாய்கள் உள்ள இந்த நிலம், அருகிலுள்ள குறவன் குப்பத்துக்குச் சொந்தமானது. அதோ, கூட்டமாக நிற்கிறூர்களே, அவர்கள்தான் இந்த நிலத்துக்குச் சொந்தக்காரர்கள்" என்று சுட்டிக்காட்டினூர்கள். இந்த நிலத்தில் என்ன விளைந்துகொண்டிருந்தது என்று கேட்டேன். "நெற்பயிர் செய்வோம்! வரகு மல்லாக்கொட்டை, மிளகாய், திணை, கம்பு, சாமை, கேழ்வரகு, சோளம், புகையிலை எல்லாம் விளையும் என்றூர். இன்னெருவர் அழுக்குத் துண்டை இடுப்பில் கட்டிக்கொண்டு, 'என்ன கேட்கிறீங்க?' என்று கேட்டார். 'நீங்கள் யார், எங்கே வேலை?' என்று கேட்டேன். அதற்கு அவர், 'நானும் குறவன் குப்பத்தான். இங்கு எனக்கும் நிலம் இருக்கிறது. நானும் இங்கு வேலை செய்கிற தொழிலாளிதான்!' என்றூர்.

நிலத்தில் செய்திருந்த பயிரை அழித்து விட்டதால், அதற்கு சிறிது நஷ்டஈடு கொடுத்திருப்பதாகவும், நிலத்துக்கு பின்னர்தான் தருவதாக அதிகாரிகள் தெரிவித்திருப்பதாகவும் கூறினூர். நிலத்தைச் சர்க்கார் எடுத்துக் கொள்ளுவதால், நிலமிழந்த விவசாயிகளுக்கு நிலமும் நல்ல வசதிகளும் பின்னர் செய்து கொடுக்கப் போவதாக சுரங்க நிர்வாக அதிகாரி ஸ்ரீ டி. எம். எஸ். மணி தெரிவித்தார்.

### மலையை எழுப்பினர்

பிறகு நாங்கள் நீர் இறைக்கும் இடமான குறவன் குப்பத்தை விட்டு, பரீட்சார்த்தமாக வெட்டப்பட்டிருக்கும் குவாரியை நோக்கிச் சென்றோம். போகும்போதே ஒரு பெரிய மலையைப் பார்த்தோம். மலையில் புல் பூண்டுகளோ, மரம் செடிகளோ இல்லை. குவாரி வெட்டப்பட்டுள்ள விஷயம் ஏற்கெனவே தெரியுமாதலால், அந்த மண் மேடுதான் இவ்வளவு பெரிய மலையாக நிமிர்ந்து நிற்கிறது என்று யூகித்துக்கொண்டேன். மலையளவு பள்ளம் பறிப்பதில் வெற்றிபெற்ற பழைய சுரங்க இன்ஜினீயர் எச். கே. கோஷின் திறமையையும், தொழிலாளர்களின் போற்றுதற்குரிய உழைப்பையும் நினைத்துப் பெருமிதமடைந்தேன்.

### பாம்புகள் ஜாக்ரதை!

நீர் இறைப்புக் குழாய்கள் அமைந்திருக்கும் இடத்தில் ஒரு போர்டு இருந்தது. அதில் "இரவு ஷிப்ட் டிரில்லர்களே! கண்களை நன்ருக விழித்துப் பாருங்கள். பாம்புகள் அதிகம்" என்று ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருக்கிறது. இதிலிருந்து இந்த வட்டாரத்திலும் பக்கத்துக் கிராமங்களிலும் கூட பாம்புகள் ஏராளமாக இருக்கின்றன என்று தெரிய வருகிறது. பாம்பென்றல், படை நடுங்கினூலும், பாட்டாளிகள் நடுங்கமாட்டார்கள் என்பதை, இங்கு வேலைகள் தொடர்ந்து நடைபெறுவதிலிருந்தே தெரிந்துகொள்ளலாம்.

### வெற்றிக் கிணறு

பிறகு எங்களைக் காரில் ஏற்றி 3-ம் நம்பர் கிணற்றைப் பார்வையிட அழைத்துச் சென்றூர்கள். பார்த்தோம். இது மாதிரிக்கிணரும்! மொத்தம் 3 கிணறுகள் தோண்டப்பட்டதாம். முதல் கிணறு 90 அடி ஆழமும், இரண்டாவது கிணறு 180 அடி ஆழமும் தோண்டப்பட்டதாம். நெய்வேலி ரயில்வே ஸ்டேஷனருகில் 30 அடி குறுக்களவில் வெட்டப்பட்ட கிணற்றில் தண்ணீர் அதிகமாகப் பெருக்கெடுத்து விட்டதாம். அதை அடைக்க நூற்றுக்கணக்கான சிமிண்டு மூட்டைகளையும் மணல் மூட்டைகளையும் போட்டார்களாம். ஆனல் அவையெல்லாம் கிணற்றுக்கு அடியிலேயுள்ள ஒரு ஆள் நுழையக்கூடிய அவ்வளவு பெரிய நீரூற்றுத் துளைகளில் அந்த மூட்டைகளெல்லாம் வேகமாக அடித்துச்சென்றுவிட்டதாம். நீரூற்று இடைஞ்சல் காரணமாக அவற்றை அப்படியே நிறுத்திவிட்டு, தாண்டவன்குப்பத்தில் 1952ம் வருடத்தில் 3வது கிணறு வெட்டினூர்கள். அதன் ஆழம் 250 அடி. குறுக்களவு 10 அடி! 150வது அடி ஆழத்திலேயே தண்ணீர் இருக்கிறது. இதில் 171வது அடி ஆழத்தில் கரியைக் கண்டு பிடித்ததாகவும் தெரிகிறது.

இந்தக் கிணற்றிலும் ஊற்றுக்கள் பீறிடத்தான் செய்தன. அந்த ஊற்றுக் கண்களை அடைக்க வேண்டும். சக்திவாய்ந்த இயந்திரம் மூலம், கிணற்றைச் சுற்றிலும் பல குழிகள் தோண்டி, காற்றின் அமுக்கும் சக்தியை, கம்ப்ரசர் மூலமாக உள்ளே செலுத்தினூர்கள். சிமிண்டுகள் போட்டு ஊற்றுக் கண்களை அடைத்தனர். என்றூலும் கசிவு இருந்தது. எனவே 160வது அடியில் பக்கவாட்டில் சமதூரமாக சுரங்கம் குடைந்து, தண்ணீரை வெளியேற்றினூர்கள். இந்த ஆராய்ச்சி வீண்போகவில்லை. வெற்றிதரும், முன்னேறுக! என்று நம்பிக்கை தந்து ஊக்க மூட்டியது இந்த 3ம் நம்பர் கிணறுதான்!

### குவாரி சுபீட்சத்தின் சாவி

அந்தக் கிணற்றையொட்டி சிறிது தூரத்திலுள்ள திறந்த வெளி குவாரி வெட்டப்பட்டிருக்கிறது. அங்கு சென்றோம்.

இதுபற்றி சில தகவல் கிடைத்தன. இந்தக் குவாரி வெட்டும் பொறுப்பை, 1947-ல் பீகார் மாகாணத்தில் ஓர் தனிப்பட்ட சுரங்கத்தில் வேலை செய்துகொண்டிருந்த எச். கே. கோஷிடம் இந்திய சர்க்கார் ஒப்படைத்தது. அவர் இங்கு வந்து, பக்கத்துக் கிராமங்களிலுள்ள ஏழை விவசாயிகளுடனும், ஹரிஜன மக்களுடனும் சகஜமாகப் பேசியும், நன்ருகப் பழகியும் தொடர்பு ஏற்படுத்திக்கொண்டு, அவர்களைக் கொண்டு, சுமார் 23 சதுர மைல் பிரதேசத்தில் பல இடங்களில் கை-போரிங் உதவிகொண்டு பூமியில் துளை போட்டார். மனித உழைப்பையும், வெறும் போரிங்கையும் கொண்டு எவ்வளவுதூரம் துளை போட முடியும்? இப்படித் துளை போடுவதில் 2 வருடங்கள் சென்றன. கோஷுக்கு தமிழ் மக்களிடம் சரிவரப் பேசிப் பழக முடியவில்லை. ஏனென்றல், இவர் வங்காளி. தமிழ் தொழிலாளர்கள் பேசுவதைப் புரிந்துகொள்வதற்காக பீகார் சுரங்கத்தில் வேலை செய்துகொண்டிருந்த 4, 5 பேர்களை ஸ்ரீ கோஷ் வரவழைத்தார். அவர்கள் தமிழர்கள். வடாற்காடு ஜில்லா குடியாத்தத்தைச் சேர்ந்தவர்கள். பிழைப்புக்காக பீகார் நிலக்கரிச் சுரங்கத்தில், ஸ்ரீ கோஷின் கீழ் டெக்னிஷியன்களாக வேலை செய்தவர்கள். அவர்களுக்கு வங்காள பாஷை [illegible]யும். இவர்களின் உதவிகொண்டு, மக்களை வேலை வாங்கினூர் கோஷ்!

நாளடைவில் டீஸல் இஞ்ஜின் டிரில் போரிங் வந்தது. 1949-ல் ஜார்ஜ் பாலிங்டிரில் என்ற 1500 அடிவரை துளை போடக்கூடிய சக்திவாய்ந்த மெஷினும் வந்தது. தமிழ்நாட்டின் பல ஜில்லாக்களிலிருந்து இயந்திர வேலை தெரிந்த திறமை மிக்க தொழிலாளர்களும் நெய்வேலியில் வேலை செய்யப் பெருமையோடு முன்வந்தனர், அவ்வீரர்கள் தோண்டியதுதான் இந்தக் குவாரி!

**ஐ. மாயாண்டி பாரதி**

அது ஒரு தண்ணீர் இல்லாத பாதாள தெப்பக்குளம் போலிருக்கிறது. 600 அடி நீளம், 600 அடி அகலம் உள்ள குவாரி இது. அதாவது $600 \times 600 = 3,60,000$ சதுர அடி பரப்புடையது. $600 \times 4 = 2400$ அடி சுற்றளவுடையது. மேல் தளத்தில் இருந்து பார்த்தபோது, பயமாய்த்தானிருந்தது. வளைந்து வளைந்து செல்லும் மண் படிகள் மூலமாகக் கீழே இறங்கினேம். 145 அடி இறங்கிவிட்டோம். அதிலிருந்து கீழே $10\frac{1}{2}$ அடி குறுக்களவு உள்ள கிணறு வெட்டப்பட்டுள்ளது. பூமி மட்டத்திலிருந்து $176\frac{1}{2}$-ஆவது அடியில் பழுப்பு நிலக்கரி தட்டுப்படுகிறது. இதுவரை 40 டன் லிக்னைட் (பழுப்பு நிலக்கரி) இதில் வெட்டியெடுக்கப்பட்டுள்ளதாம். அந்தக் கிணற்றில் தொங்க விடப்பட்டிருக்கும் ஏணியின் மூலமாக ஒரு தொழிலாளி, பழுப்பு நிலக்கரியை எடுத்துக்கொண்டு வெளியே வந்தார். அதை நாங்களெல்லாம் ஆர்வத்தோடு, எத்தனை எத்தனையோ இன்ப எண்ணங்களோடு வாங்கிப் பார்த்தோம்.

### போற்றுவோம்!

தமிழகத்திற்கு மட்டுமல்லாமல், தென்னகம் முழுவதுக்குமே செழிப்பைத்தரும் செல்வக்களஞ்சியத்தின் இரும்புக் கதவைத் திறந்துவிடும் புனித முயற்சியில் ஈடுபட்டுள்ள இத்தொழிலாளர்களை நினைக்கும்போது, எனது உள்ளம் பெருமையால் விம்மிற்று. புது வீடு கட்டி, கிருகப்பிரவேசம் நடக்கும்போது, அவ்வீட்டைக் கட்டிய கொத்தனூர்களையும், கொல்லர், தச்சர் முதலியவர்களையும் அழைத்து, சந்தனம் பூசி, மாலைகளிட்டு, தட்டுத் தாம்பாளத்தில் பட்டாடைகளும் பரிசுப்பணமும் வெற்றிலைப் பாக்கும் வைத்து, வீட்டுச்சொந்தக்காரர் மரியாதை செய்வது தமிழ் மக்களின் பரம்பரைப் பண்பு. அதுபோல், சுரங்கச் சொந்தக்காரர்களாகிய தென்னூட்டு மக்கள் அனைவரும், குவாரிகளையும், கிணறுகளையும் தோண்டிய தொழிலாளர்களையும் இன்ஜினீயர்களையும் ஆராய்ச்சியாளர்களையும் இதற்கு நேரடியாகவும் மறைமுகமாகவும் காரணமாயிருந்த மற்றுமுள்ள அனைவரையும் எவ்வளவு போற்றினூலும் தகும்! வாழ்த்தினூலும்தகும்! "இந்தத் திட்டம்ஆரம்பமானல் ஒரு புதையல் பொக்கிஷம் நமக்குக் கிடைத்ததுபோலாகும்; சிரமத்தைப் பார்க்காமல் உழைக்கும் மனிதர்களுக்கு, பரிசளிப்பதற்காகவே, இந்தப் புதையல் பல கோடி வருஷங்களுக்கு முன் பூமிக்கடியில் புதைத்து வைக்கப்பட்டிருக்கிறது" என்று இந்திய சர்க்காரின் பிரச்சார இலாகா கூறினூலும், அதை நடைமுறையில் கொண்டுவரும்படிச் செய்வது தமிழ்நாட்டு மக்கள் அனைவருடைய கடமையாகும்.

### வெள்ளைக் களிமண்ணே? விலையுயர்ந்த பொன்னே?

குவாரிக்குள்ளிருக்கும் பரீட்சார்த்தக் கிணற்று மேட்டில் நின்றுகொண்டு அண்ணூந்து பார்த்தேன். அந்த மாபெரும் குவாரிச் சுவரில் பலவித வர்ண மண் கண்டேன். பூமி மட்டத்துக்கும் கீழுள்ள பல்வேறு மண்படிவங்கள் அவை. மேலாக மண், அதற்கும்கீழ் மஞ்சள் களிமண், பிறகு களி கலந்த மணல், அதன்பின் வெள்ளைக் களிமண், பிறகு கடினமான கல், பிறகு கடலூரல் கூழாங்கல் படிவம், அப்புறம்தான் நிலக்கரி, நிலக்கரிக்கும்கீழே தண்ணீர், அதற்கும்கீழ் என்னவென்று தெரியவில்லை. 400 அடி ஆழம்வரைதான் குழாய்செலுத்தி ஆராய்ச்சி நடந்திருக்கிறது.

பழுப்பு நிலக்கரி தோண்டப்போன இடத்தில் வெள்ளைக் களிமண்ணும் அகப்பட்டது. இது எத்தனையோ கோடி டன் நெய்வேலியில் உள்ளது. இந்தக் களிமண் சுத்த வெள்ளையாகவும் இருக்கிறது, சிகப்பு கலந்த வெள்ளையாகவு மிருக்கிறது. வழ வழப்பாயு மிருக்கிறது. இங்கு பீங்கான் தொழிற்சாலை ஏற்படுத்தினல், இதைக்கொண்டு, டீ குடிக்கிற கப் அண்ட் சாஸர் செய்யலாம்; மின்சாரக் கம்பத்துக்கும் தந்திக் கம்பத்துக்கும் உச்சியில் கம்பிகளைத் தாங்கிக்கொண்டு வெள்ளையாக குப்பி இருக்கிறதே, அந்தக் குப்பிகளை உற்பத்தி செய்யலாம். சற்று நினைத்துப் பாருங்கள்! நமக்கு எத்தனை லட்சம், எத்தனை கோடி குப்பிகள் (இன்சுலேட்டர்கள்) தேவை என்று! பீங்கான் பாத்திரங்கள், பொம்மைகள், கூஜாக்கள், பூச்செடித் தொட்டிகள், முகப் பவுடர், நாமக் கட்டி, சாக் பீஸ், முதலியன உற்பத்தி செய்யலாம். கையொடிந்து போனல் நீண்ட நாள் பேண்டேஜ்போட, தப்பை வைத்துக் கட்டி மாவுத் தடவுகிறூர்களே, (பிளாஸ்டர் ஆப் பாரிஸ்) அந்த மாவும் செய்யலாம். சிமிண்ட் தொழிலுக்கும் உபயோகப்படுமாம். சிலைகளும் செய்யலாமாம்!

### மூச்சுத் திணறிற்று

குவாரியைவிட்டு படிகளிலேயே ஏறினேம். தேகப் பயிற்சி இல்லாத பத்திரிகை நிருபர்களுக்கு இது கடுமையான பயிற்சியை அளித்தது இந்த குவாரி ஏறு படலம்! பூமிக்குமேல் வந்தவுடனே தண்ணீர் தண்ணீர் என்று திணறினூர்கள் எல்லோரும். நானும்தான் திணறினேன். தினம் 10 அணு 12 அணு சம்பளத்தில் 12, 16 மணி நேரம் இந்தக் குவாரியில் வேலை செய்த ஆண், பெண் தொழிலாளர்கள் நமக்காக எவ்வளவு கஷ்டப்பட்டார்களோ?

அடுத்த வாரம் பழுப்பு நிலக்கரியின் பயன்கள், கிழக்கு ஜெர்மனியின் உதவி, பத்திரிகை நிருபர்கள் மகாநாடு முதலியவைபற்றி எழுதுவோம்.

---

திரு-கொச்சியில்

## நகரசபைத் தேர்தலில் ஐக்கியமுன்னணி வெற்றி

வங்காளத்தில் நடைபெற்ற நகரசபைத் தேர்தல்களில் காங்கிரஸ் முறியடிக்கப்பட்ட செய்தியை வேறு இடத்தில் பிரசுரித்திருக்கிறோம்.

திரு-கொச்சியில் உள்ள பிரதான நகரசபைகள் எல்லாவற்றிலும் காங்கிரஸ் சிறுபான்மைக் கட்சியாகிவிட்டது. தலைநகரான திருவனந்தபுரத்தில் மொத்தம் 40. பி. சோ. கட்சிக்கு 16, நகர மக்கள் முன்னணிக்கு 6, காங்கிரஸ் 6, ஆர். எஸ். பி. 4, ஆர். சி. பி. ஐ. 1 சுயேச்சை 7. மேயராக இருந்த காங்கிரஸ் அங்கத்தவர் கம்யூனிஸ்ட் அபேட்சகர் அனிருத்தனல் தோற்கடிக்கப்பட்டார்.

ஆலப்புழை நகரசபையில் மொத்தம் 36 ஸ்தானங்களில் 24 ஸ்தானங்கள் ஐக்கிய முன்னணிக்குக் கிடைத்தன.

கம்யூனிஸ்ட் தலைவரும் நகரசபை சேர்மனுமான தோழர் டி. வி. தாமஸ் அமோகமான ஆதரவு பெற்று வெற்றி யடைந்தார். சென்ற தடவை 20 ஸ்தானங்களுடன் நிர்வாகம் நடத்திவந்த ஐ. மு.வுக்கு மீண்டும் நாலு ஸ்தானங்களில் வெற்றி ஈட்டித் தந்து மக்கள் தமது நம்பிக்கையைப் பிரகடனப்படுத்தினூர்கள்.

கொல்லம் நகர சபையில் மொத்தம் 32 ஸ்தானங்களில் 23 ஐக்கிய முன்னணிக்கு, காங்கிரஸிற்கு 9 தான். எரணுகுளத்தில் 32 ஸ்தானங்களில் காங்கிரஸிற்கு 14 ஸ்தானங்களே கிடைத்தன. கோட்டயத்தில் நகர சேவா சமிதிக்கு 17 ஸ்தானங்களும், காங்கிரஸிற்கு 11-ம் கிடைத்துள்ளன. சேர்த்தலையில் ஐ. மு.வுக்கு 15-ம், காங்கிரஸிற்கு 4-ம் ஸ்தானங்கள். இன்னும் பல முடிவுகள் எதிர்பார்க்கப்படுகின்றன.

---

## மாத்தூர் போராட்டத்தில் சிறைத் தண்டனை

செங்கற்பட்டு ஜில்லா மாத்தூரில் நடைபெற்ற விவசாயிகள் போராட்டத்தில் 29-3-56ல் பத்து நாள் தண்டிக்கப்பட்ட திருநாகேஸ்வரம் தோழர் கே. எம். சமரபுரி 7-3-56ல் விடுதலையானூர்.

---

## சென்னை ராஜ்யத்தில் மண்ணெண்ணை ஊற்று

### ரஷ்ய நிபுணர்கள் கண்டுபிடிப்பு

சென்னை ராஜ்யத்தில் எண்ணைக் கிணறுகள் இருப்பதாக ரஷ்ய நிபுணர்கள் அறிக்கை சமர்ப்பித்திருக்கிறூர்கள் என்று 7-3-56ல் டில்லி லோக்சபையில் இயற்கைவள மந்திரி **ஸ்ரீ மஜீதியா** கூறினூர்.

மற்றும் ஆந்திரக் கடற்கரை, திரு-கொச்சி, அஸாம், மேற்கு வங்கம், ஒரிஸா, பஞ்சாப், ராஜஸ்தான், திரிபுரா, சௌராஷ்ட்ரா, அந்தமான் ஆகிய இடங்களிலும் பெட்ரோல் அகப்படும் என்று ரஷ்ய நிபுணர்களின் அறிக்கை கூறுகிறது.

மலபார் ஏர்நாடு தாலூகாவில் தங்கம் இருப்பதாகவும் தெரிகிறது.

# பிரதமர் நேருவும் சோஷலிஸமும்

## அவதூறுக்குப் பதில்

நைஜாமாபாத் நகரத்தில் பாரத சேவக சமாஜ கூட்டத்தில் பேசுகையில் பிரதம மந்திரி நேரு சோஷலிஸத்திற்கு சமாதானரீதியில் செல்லவேண்டுமென்று கூறினர். இதில் யாருக்கும் ஆட்சேபணை இருக்க வேண்டியதில்லை. இது புதிதுமல்ல. சமீப காலத்தில் காங்கிரஸ் தலைவர்கள் அடிக்கடி பாடிவரும் பல்லவிதான் இது.

ஆனல்—இதை வலியுறுத்துவதற்காக சோவியத் கம்யூனிஸ்டு கட்சி காங்கிரஸின் முடிவுகளை திரித்துக் கூறி மேற்கோள் காட்டியும், வழக்கம்போல் இந்திய கம்யூனிஸ்டு கட்சியைத் தாக்கியும் அவர் பேசியிருப்பது வெறுக்கத்தக்கது மட்டுமல்ல, மிகவும் நேர்மையற்றதென்றும் கூறவேண்டும்.

முதலாளி வர்க்க சமுதாய அமைப்பிலிருந்து சோஷலிஸ சமுதாய அமைப்புக்கு மக்கள் செல்ல விரும்புவதை முதலாளி வர்க்க சமுதாயத்திலுள்ள ஆளும் வர்க்கங்கள் விரும்புவதில்லை. அதைத் தடுக்க அரும்பாடு படுகின்றனர். அரசாங்க யந்திரத்தைத் தங்கள் கையில் வைத்துக்கொண்டு சோஷலிஸத்திற்கு வழி வகை செய்யும் ஆரம்ப நடவடிக்கைகளைக் கூடத் தடுக்கின்றனர். பலாத்காரத்தை மக்கள்மீது பிரயோகிக்கின்றனர். பலாத்காரத்தைக் கொண்டே தங்களது நல உரிமைகளை பாதுகாத்துக் கொள்ளுகின்றனர். இதன் காரணமாகவே சோஷலிஸ லட்சியத்தைக் கருத்தில் கொண்ட மக்கள் தங்களைத் தற்காத்துக் கொள்ளும் நடவடிக்கைகளை ஏற்றுக் கொண்டே, ஆளும் வர்க்கங்களின் பலாத்காரத்தை சமாளித்து முன்னேறினர் என்பது சரித்திரம் கூறி வந்துள்ள உண்மை.

தொழிலாளி வர்க்கம் தானுகவே பலாத்காரத்தை விரும்புவதுமில்லை, அனுஷ்டிப்பதும் இல்லை. முதலாளி வர்க்கத்தின் பலாத்காரம்தான் தொழிலாளி வர்க்கத்திற்கு இந்த நிர்ப்பந்தத்தை ஏற்படுத்துகிறது. ரஷ்யப் புரட்சி சம்பந்தமாக நடந்த நிகழ்ச்சிகளை இவ்வாறுதான் தோழர் குருஷேவ் பெங்களூரில் நடத்திய சொற்பொழிவில் குறிப்பிட்டு முதலாளி வர்க்கத்தின் அவதூறுப் பிரசாரங்களுக்கு ஆணித்தரமாகப் பதில் அளித்தார்.

சோஷலிஸ உலகம் மேலும் பன்மடங்கு வளர்ந்துள்ள நிலைமையில், தொழிலாளி வர்க்கத்தின் தலைமைப்பாத்திரம் ஒவ்வொரு நாட்டிலும் மக்களால் மேன்மேலும் உணரப்பட்டுவரும் சூழ்நிலையில் — சோஷலிசப் பாதைக்கு பலாத்காரம்தான் விரும்பப்படுகிறதென்ற குற்றச்சாட்டுக்கு அர்த்தமே கிடையாது.

ஆனல் முதலாளி வர்க்கத்தின் பலாத்காரப் போக்கு கைவிடப்பட்டு வருகிறதா? சமாதானரீதியில் சமுதாய மாறுதல்களை மக்கள் விரும்புவதை, அதற்கான நடவடிக்கைகள் சட்டபூர்வமாகவும் சமாதான முறையிலும் நடைபெறுவதை, ஆளும் வர்க்கங்களான முதலாளிகளும் நிலப்பிரபுக்களும் இன்று அனுமதிக்கிருர்களா? இதைப்பற்றி பண்டித நேரு மௌனம் சாதிப்பது நமக்குப் புதிராக இல்லை.

சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சிச் காங்கிரஸ் தீர்மானத்தில் கீழ்க்கண்ட வாக்கியங்கள் கவனத்திற்குரியவை:

"...தாங்களாகவே ஆளும் வர்க்கங்கள் தங்கள் அதிகாரத்தை விட்டுக்கொடுக்க மாட்டார்கள் என்று லெனினிஸம் நமக்குப் போதிக்கிறது. ஆயினும் வர்க்கப் போராட்டம் கடுமையான உருவத்தை அடையுமா இல்லையா, சோஷலிஸத்திற்குச் செல்லும் மாறுதலில் பலாத்காரம் உபயோகப்படுத்தப்படுமா இல்லையா என்ற விஷயங்கள் தொழிலாள வர்க்கத்தைப் பொறுத்திருப்பதைவிட மிகப்பெருவாரியான மக்களின் விருப்பத்திற்கு சுரண்டல் கூட்டம் காட்டும் எதிர்ப்பையும், சுரண்டும் வர்க்கமே பலாத்காரத்தைக் கையாள்வதையும் பொறுத்தே இருக்கிறது."

இன்றுள்ள நிலைமையில் தொழிலாள வர்க்கம் இதர ஜனநாயக சக்திகளனைத்தையும் திரட்டிக் கொண்டு, முதலாளிகளுக்கும் நிலப்பிரபுக்களுக்கும் சரணடையும் சந்தர்ப்பவாதப் போக்குகளை உறுதியாக உதறித் தள்ளிக் கொண்டு, மக்கள் நலனை எதிர்க்கும் பிற்போக்கு சக்திகளை முறியடிக்கவும் பார்லிமெண்டில் உறுதியான மெஜாரிட்டியைப் பெறவும் அந்த சபையை மக்களின் உண்மையான கருவியாக மாற்றவும் சாத்தியப்பாடுகள் வளர்ந்துள்ளதையும் சோவியத் கம்யூனிஸ்டு கட்சிக் காங்கிரஸ் தீர்மானம் சுட்டிக்காட்டுகின்றது.

மேலும் தோழர் குருஷேவ் அந்தக் கட்சிக் காங்கிரசுக்கு அளித்து ஏகமனதாக ஏற்றுக்கொள்ளப்பட்ட ரிப்போர்ட்டில்,

"சோஷலிசத்திற்குச் செல்லும் மாறுதல் எந்த உருவத்தை எற்ருலும், தொழிலாள வர்க்கம் அதனுடைய முன்னணியின் தலைமையில், அரசியல் தலைமையாக இருப்பது தவிர்க்கமுடியாத தீர்மானமான பாத்திரம் வகிக்கும் அம்சமாகும். இதுவன்றி சோஷலிசத்திற்குச் செல்லமுடியாது."

என்று குறிப்பிட்டுள்ளதும் நேயர்களின் கவனத்திற்குரியது.

பண்டித நேரு அவர்களுக்கு இவையெல்லாம் தெரியாத விஷயங்களல்ல. இந்தியாவிலுள்ள பெருமுதலாளிகளைக் கட்டுப்படுத்த விரும்பாமல், நிலப் பிரபுக்களின் உரிமைகளை ஒழித்துக்கட்ட விரும்பாமல், பிரிட்டிஷ் மூலதனத்தின் பிடிப்பைத் தளர்த்துவதற்கான நடவடிக்கைகளை எடுக்காமல்—சுருங்கச் சொன்னல் நமது நாட்டில் சோஷலிச மாறுதல்கள் உண்மையாக ஏற்படுவதற்கான ஆரம்ப நடவடிக்கைகளை உறுதியாக எடுக்க விரும்பாமல், பிரதம மந்திரி சோஷலிசம் பேச வருவதும், பலாத்காரமின்றி சோஷலிசத் திட்டமென்று கூறுவதும், மக்களை ஏமாற்றுவதாகும்.

கம்யூனிஸ்டு கட்சியைக் கிண்டல் செய்யும் முறையில் பேசிவிட்டால் மட்டும் சோஷலிசம் காங்கிரஸ் சர்க்காரால் கொண்டுவரப் படுகிறதென்று யாரும் நம்பப் போவதில்லை.

இதனல்தான் பண்டித நேரு இதே பிரசங்கத்தில் பின்வருமாறு கூறுகிருர்:

"சோஷலிசத்தின் பூர்ணமான இறுதியான படம் எவ்வாறிருக்குமென்று எனக்கே தெரியாது. ஜனங்களின் பொருளாதார வாழ்க்கையை அபிவிருத்தி செய்யவேண்டும், செல்வத்தை அதிகரிக்கவேண்டுமென்று பொதுவாகத்தான் தெரியும். நான் சோஷலிஸத்தைப் பற்றி வரையறுத்துக் கூற விரும்பவில்லை. அவ்வாறு செய்தால் வரட்டுத் தத்துவத்தில் சிக்கியவர்களாவோம்."

இவ்வாறு பிரதமர் நேரு பேசுவதைப்பற்றி ஆச்சரியப்படவேண்டியதில்லை. இத்தகைய "சோஷலிஸ மாடலை" பெரு முதலாளிகளே இன்று ஆட்சேபிக்கப்போவதில்லை. அதனல்தான் சர்க்காரின் கொள்கைகள் சோஷலிஸத்திற்கு அஸ்திவாரமிடுவதற்கு பதிலாக ஆளும் வர்க்கங்களின் நலனையே பிரதானமாகக் கருத்தில்கொண்டு நிறைவேற்றப்படுகின்றன.

இதனல் மக்களிடம் அதிருப்தி அடிக்கடி எழுவதையும் வாழ்க்கை நலனுக்காக சர்க்காரின் கொள்கைகளை மாற்றியமைக்க மக்கள் குரலெழுப்புவதையும் தொடர்ந்து பார்க்கிருேம்.

மக்களின் இந்த நியாயமான விருப்பங்கள் பூர்த்தியாகும் வகையில் கம்யூனிஸ்டு கட்சி ஒவ்வொரு துறையிலும் சர்க்காரின் கொள்கைக்கு மாற்றுக் கொள்கையாக ஜனநாயகரீதியான திட்டங்களை வைத்து மக்களின் ஆதரவை மென்மேலும் பெற்றுவருவதை பண்டித நேரு நிச்சயம் பார்க்கிருர். இது அவருக்குக் கண்ணை உறுத்துகிறது போலும். இத்தகைய தவருன பிரசாரங்களுக்குப் பொறுமையுடனும் பொறுப்புணர்ச்சியுடனும் உறுதியாக பதிலளித்துக்கொண்டே மக்களின் சகல பகுதியினரிடையும் தொடர்ந்து தொண்டாற்றி ஒற்றுமையையும் ஜனநாயகத்தையும் வளர்க்கப் பாடுபடுவதே கம்யூனிஸ்டுகளை எதிர்நோக்கும் கடமையாகும்.

—எம். ஆர். வி.

## ஸ்டாலின் மறைவு தினம்

1953-ம் வருடம் மார்ச் மாதம் 5-ந் தேதி தோழர் ஸ்டாலின் இயற்கை எய்தினர். அந்தச் செய்தி கேட்டு இந்திய மக்களனைவரும் கட்சிபேதமின்றி தங்கள் வருத்தத்தைத் தெரிவித்தனர்.

2-வது உலக மகா யுத்தத்தில் பாசிசம் முறியடிக்கப்படுவதற்கு சோவியத் மக்கள் நிகழ்த்திய வீரம் செறிந்த போராட்டத்தில் ஸ்டாலினுக்கிருந்த முக்கியமான பங்கை மக்கள் மறக்கவில்லை.

மீண்டுமொரு உலக யுத்தம் மூளாமலிருக்க சமாதான இயக்கம் எழுந்தபோது, சமாதான லட்சியத்தை மக்கள் தங்களது பிரச்சினையாகக் கொண்டால் நிச்சயம் வெற்றிகாணலாமென்று ஸ்டாலின் கூறியது எங்கும் வரவேற்கப்பட்டது. ஸ்டாலின் மறைவுக்குப்பிறகு சோவியத் யூனியன்-மக்கள் சைன தலைமையில் உலக மக்கள் எடுத்துவந்துள்ள நடவடிக்கைகள் யுத்த கெடுபிடியைத் தணித்து உலக சமாதான சக்திகளை வலுப்படுத்தியிருப்பது தற்கால நிகழ்ச்சியாகும்.

சோவியத் கம்யூனிஸ்டு கட்சியிலும் சோவியத் மக்கள் மத்தியிலும் முக்கிய புருடராக நீண்டகாலம் விளங்கி உலக வரலாற்றில் குறிப்பிடத்தக்க இடம்பெற்ற தோழர் ஸ்டாலினுக்கு நமது அஞ்சலி.

# மத்தியக் கிழக்கில் சுதந்திரப் போர்

## தளபதி கிளப் பாஷாவுக்கு கல்தா

அரேபிய நாடுகளில் ஒன்று ஜார்டன். இந்த நாடு இதுவரை பெயரளவில்தான் சுதந்திர நாடு. உண்மையில் ஆதிக்கம் புரிந்தது பிரிட்டன். இந்த நாட்டின் ராணுவத்தின் தலைவன் ஒரு பிரிட்டிஷ்காரர். அதிகாரிகளும் அவர்களே. இவ்விதம் அடிமைப்பட்டு தனது செல்வத்தை எல்லாம் பிரிட்டனுக்கு பறிகொடுத்து வந்த ஜார்டன் தேசத்திலே இன்று சுதந்திரக் கனல் மூண்டு ஒளி வீசுகிறது.

பிரிட்டிஷ் தளபதி கிளப் பாஷாவை ஜோர்டன் மன்னர் கல்தாக் கொடுத்து அனுப்பிவிட்டார். இது ஒரு தலைசிறந்த ஏகாதிபத்திய எதிர்ப்பு நடவடிக்கை, தேசபக்த நடவடிக்கை, அரபு நாடுகளின் அரசுரிமைக்கு அந்தஸ்தைத் தரும் நடவடிக்கை என்பதில் சந்தேகமில்லை.

யார் இந்த கிளப் பாஷா? பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் விசுவாசமுள்ள ஊழியனுக இருபத்தாறு வருடங்களாக அரபு படைகளின் தளபதியாக இருந்து வந்த பேர்வழி. பிரிட்டன் தனது ஆதிக்கத்தை நிலைநாட்டிக் கொள்வதற்காக சிருஷ்டித்த படைதான் அரபுப்படை. இதன் தளபதி என்ற நிலையில் ஆதிக்க வெறியாட்டமாடி ஜார்டானின் 'உண்மையான மன்னன்' தானே என்ற அளவு திமிராடிய தளபதி கிளப் பாஷா,

பிரிட்டிஷ் தளபதிகளையும் பிரிட்டிஷ் நிதியையும் நம்பி பிரிட்டனுக்குத் தலைவணங்கி தாசானுதாசனுக இருந்தால்தான் ஆட்சி நடத்தலாம், என்ற போக்குக்கு முற்றுப்புள்ளி வைக்கிறது இந்த நடவடிக்கை. பிரிட்டனுக்கு அம்மான் விமான தளத்தை அடகு வைத்து விட்டு, ஒரு கோடி இருபது லட்சம் பவுன் மான்யம் பெறுவது தமது தன்மானத்திற்கு ஒவ்வாதது என்று கொதித்துக் கொந்தளிப்படைந்திருக்கிருர்கள் ஜார்டன் மக்கள். அதோடு தமது நாட்டை பாக்தாத் ஒப்பந்தம் என்ற ஆங்கிலோ-அமெரிக்க ராணுவக்கூட்டணியில் நிர்ப்பந்தப்படுத்திச் சேர்க்கத் தில்லுமுல்லுகள் செய்த கிளப் பாஷாவை அவர்கள் மன்னிக்க முடியாது. அதனல்தான் கிளப்பாஷா ஒழிக! என்ற கோஷம் எழுப்பி பலத்த கிளர்ச்சி செய்தனர்.

இந்த முடிவு ஜார்டனின் சமாதான ஆர்வத்தையும் சுதந்திர அபிலாஷையையும் பகிரங்கமாக்குகிறது. மேற்கு ஏகாதிபத்தியங்களின் மகிமையும் செல்வாக்கும் தேய்ந்து இறங்குமுகத்தில் வீழ்ந்து கொண்டிருப்பதைக் காட்டுகிறது. தமது ஆடும் பாவைகளாக தமது யுத்தத் திட்டங்களுக்கு தாளம் போடும் அடிவருடிகளாக அரபு நாட்டு ஆட்சி பீடங்களை என்னென்றும் வைத்திருக்கலாம் என்ற எண்ணத்தில் மண்விழுந்திருக்கிறது.

ஜார்டனுக்கு இத்தகைய தைரியம் ஏற்பட்டதற்குக் காரணமென்ன? ஜார்டன் மக்கள் இன்று தம் நாட்டு அரசியல் அலுவல்களில் முன்வந்து தீவிரமாக ஈடுபட்டிருப்பது முதற்காரணம். இரண்டாவதாக மத்திய கிழக்கு நாடுகளிடை எகிப்து சிரியா சவுதி அரேபியா முதலிய நாடுகள் சுதந்திரமான முடிவுகளை எடுத்து முன் செல்வதனல் ஏற்பட்ட தைரியம். மூன்ருவதும் அதிமுக்கியமானதுமான காரணம், சோஷலிஸ்ட் நாடுகளின் தன்னலமற்ற உதவியும் நட்புறவும் சோஷலிஸ நாடுகள் சுதந்திரத்திற்காகப் போராடும் நாடுகளுக்கு உதவ முன்வந்திருப்பது மாகும்.

ஏகாதிபத்தியங்களுக்கு அடிமைப்பட்டுக் கிடந்ததுபோலன்றி சரி சமத்துவ அந்தஸ்துடன் தம் நாட்டு நலனுக்கும் அரசுரிமைக்கும் முன்னேற்றத்திற்கும் துணை செய்யும் பல்வேறு உதவிகளை சோஷலிஸ்ட் நாடுகளிடமிருந்து பெறும் மகத்தான வாய்ப்பு இப்பொழுது ஏற்பட்டுவிட்டது. இதனல்தான் குனிந்தவர் நிமிர்கின்றனர். இந்த உண்மையைத்தான் கிளப் பாஷாவை விலக்கிய ஜார்டனில் நாம் காண்கிருேம்.

இதோடு ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் பாந்துங் மகாநாடும் பஞ்சசீலக் கோட்பாடுகளும் இந்த நாடுகளுக்கு புத்துயிர் அளித்துள்ளன என்பது தெளிவு. யுத்தக் கூட்டணிகளில் இழுபட்டு, அரசுரிமையைப் பணயம்வைத்து, மக்கள் வாழ்க்கையை அபிவிருத்திசெய்ய மார்க்கமின்றித் திண்டாடும் நாசப் பாதைக்குள் விழுந்துவிடாமல் சுதந்திரம் சமாதானம் சுபிட்ச வாழ்வு என்ற பாதையில் முன்னேற இன்று ஏற்பட்ட மகத்தான சர்வதேச நிலையை பயன்படுத்திக் கொண்டு முன்னேற இந்நாடுகள் மனப்பூர்வமாக முன்வந்துள்ளன என்ற யதார்த்தத்தை நாம் காணுதல்வேண்டும்.

குறைந்தபட்சக் கோரிக்கைகளுக்காக

**27-3-56 அன்று**

**சென்னை சர்க்கார் ஆஸ்பத்திரி**

**தொழிலாளர்களின்**

**அடையாள வேலைநிறுத்தம்**

## சோவியத் உடற்பயிற்சி கலைஞர்கள்

### சென்னைக்கு வருகிருர்கள்

சோவியத் யூனியனிலிருந்து இந்தியாவுக்கு வந்துள்ள மிகச் சிறந்த உடற்பயிற்சிக் கலைஞர்கள் கோஷ்டி மார்ச் 31ந் தேதி சென்னை நகருக்கு வருகிருர்கள். சென்னை கார்ப்பொரேஷன் ஸ்டேடியத்தில் அவர்கள் தம் திறமைகளைக் காட்டுவார்கள். சர்க்கஸ் அரிஞ போன்ற சினிமாக்களில், அவர்களின் வித்தைகளையும் உடல் வலிமையையும் கண்டுள்ள தமிழ் மக்கள், இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்ளுவார்கள் என்பதில் ஐயமில்லை.

சோவியத் கலைஞர்களை சென்னை ராஜ்ய உடற்பயிற்சியாளர் சங்கம் வரவேற்குமென்றும், காட்சிகளுக்கு ஏற்பாடுகள் செய்யுமென்றும் அறிவித்துள்ளார்கள்.

Regd. M. No. 5934 Printed & Published by G. ALAVANDAR, at Janasakthi Press, Subodhaya Buildings, 38, Mount Road, Madras-6.
OFFICE : 3, Anthony Street, Madras-14. Editor: K. MUTHIAH.
REGISTERED AS A NEWS PAPER IN CEYLON